


சனவரி] சமய பாட போதனைத் திங்களிதழ் [1976



பேரவையின் இலட்சியம்

ஒழுங்கினைக் காப்போம்!

உறவினை வளர்ப்போம்!

உதவிகள் செய்வோம்!

திருவள்ளுவர் ஆண்டு 2007 தைத் திங்கள்.

தமிழ்நாடு தெய்விகப் பேரவை
9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை - 600018,

# குறள் நூறு

பொருளுரை :

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. 1.

எழுத்துக்களுக்கு அகரம் முதலாதல் போல, இந்த உலகத்திற்கு இறைவன் முதலாவான்.

பொருள் :

முதல் என்பது இறைவன் உலகத்திற்குக் காரணம் என்பதும் முதல்வன் என்பதும் கருத்து.

2. மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 3.

நினைப்பவர் மனத்தின்கண் கோயில் கொண்டருளும் இறைவனின் திருவடிகளை நினைந்து தொழுபவர் நிலத்தின்கண் நீண்டகாலம் வாழ்வர்.

பொருள் :

வழிபாட்டின் பயன் மறுமை நலன் மட்டுமன்று; இம்மை நலனும் ஆம்.

3. வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. 4.

இறைவன் வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவன்; அவன் திருவடியை நினைப்பவர்க்கு எக்காலத்திலும் துன்பம் இல்லை.

பொருள் :

துன்பத்திற்குக் காரணம் விருப்பும் வெறுப்புமே. விருப்பு வெறுப்பற்ற கடவுளை நினைப்பதால் விருப்பு வெறுப்புக்கள் நீங்கி விடுகின்றன. துன்பத்திற்குரிய காரணம் நீங்கி விடுவதால் துன்பமில்லை.

4. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. 20

தண்ணீரின்றி உலகியல் இல்லை. வான் மழையின்றித் தண்ணீரில்லை. தண்ணீரில்லாத வழி ஒழுக்கமும் இல்லை.

பொருள் :

உயிர்களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் தண்ணீர் இன்றியமையாதது; தண்ணீரைத் தரும் வான்மழை பொய்ப்பின் வளம் குன்றும்; அதனல் ஒழுக்கம் கெடும்.




ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு

மணி 4 | திருவள்ளுவர் ஆண்டு 2007, இராக்கத தை, 1976 சனவரி | ஓசை 7

அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்.

இந்த இதழில், அருளோசை அன்பர்களும் பிறரும் படித்து, நலம் பெற்று உய்ய திருவாசக நூலின், முதற்கண் அமைந்துள்ள 'சிவபுராணம்' என்னும் திருப்பதிகம் வெளியிடப்பெற்றுள்ளது.

இந்து சமய மக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பெறும் விழாக்கள் அல்லது விரதங்கள் பலவாகும். அவற்றுள் ஒன்றே சிவராத்திரி விரதமும். சிவராத்திரி விரதமானது இரவில் தூங்காமல் விழித்திருந்து கடைப்பிடித்தொழுகும் விரதமாகும். சிவபிரானுக்குரிய விரதங்கள் யாவற்றுள்ளும் முதன்மை வாய்ந்ததும் சிறப்பு வாய்ந்ததும் இச்சிவராத்திரி விரதமே யாகும் எனலாம். ஆராத இன்பத்தை அருளுகின்ற-முந்தை வினைகள் முழுதுமோய சிவபுராணம்தன்னை சிந்தை மகிழ ஓதி மகிழ்வார்களாக.

தலைவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் இடைவிடாத சுற்றுப் பயணத்தாலும், அலுவல் மிகுதி காரணத்தாலும் 'திருவளர் செல்வனுக்கு' 'திருக்குறள் தேசீய நூல்' என்ற இரு கட்டுரைகளையும் இந்த இதழில் பெற்று வெளியிட இயலாமைக்கு அன்பர்கள் பொறுத்தாற்றிக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

—பதிப்பாசிரியர்



## இந்த இதழில்

# ஐயந்தெளிதல்

திருமதி. காந்திமதி இராதாகிருஷ்ணன்,
மாமண்டூர் வடபாதி

வினு : 'கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' என்ற கருத்தானது பொருத்தமுடையது தானு?

கல்லார்க்கும் கற்ருர்க்கும் களிப்பருளும் களிப்பே என்ற பொதுவான வாக்கும் இருக்கிறது. கற்றவர்களைவிடக் கல்லாதவர்களே நல்லவர்கள் இறையின்ப அனுபவத்துக்கு என்ற கருத்தும் காணப்பெறுகிறது. 'கற்றும் அறிவில்லாதார் எல்லோரினும் கல்லாதவர் எல்லோரும் நல்லவரே' என்ற பழமொழி வாசகத்தையும் காணமுடிகிறது.

கல்வி என்பது அறிவைத் தரும் கருவி. அறிவு எது? எந்த ஒரு பொருளை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாக ஆகுமோ, எந்த ஒரு பொருளை அறியவில்லையானுல் எவ்வளவு அறிந்திருந்தாலும் பயனில்லையோ அந்த ஒரு பொருளை அறிந்த அறிவே அறிவு என்று உபநிடதங்கள் முழங்குகின்றன.

கற்றதனுல் ஆய பயன் என்கொல் வாலறிவன் நற்ருள் தொழாஅர் எனின் என்ற திருக்குறளில் திருவள்ளுவர் வாலறிவன் எனப் பெறும் இறைவனை வணங்கும் செயல் நிகழ்வதற்கு எந்த அறிவு காரணமாக இருக்கிறதோ அந்த அறிவை உடையவனே கற்றவன் ஆவான் என்று பொருள்படுமாறு கூறுவதை எண்ணுதல் வேண்டும். இத்தகைய அறிவை உடையவன் கற்றவன்; இல்லாதவன் கல்லாதவன்.

கண்ணப்பரையும் சிவகோசரியாரையும் எடுத்துக்கொண்டால் அடிப்படைக் கல்வி ஆதாரக்கல்வி, ஆசாரக் கல்வி ஆகிய எல்லாவற்றையும் கற்றவர் சிவகோசரியார். கண்ணப்பர் அவைகளைக் கற்கவில்லை. காளத்தியப்பரின் கண்ணில் இரத்தம் கசியத் தொடங்கியதைக் கண்டவுடனேயே அழுதார், துடித்தார், புரண்டார். இறுதியிற் கண்ணையே தோண்டி அப்பிக் கண்ணப்பர் ஆனுர். சிவகோசரியார் பார்த்து விட்டுப் பேசாமல் இருந்தார். இங்கே கண்ணப்பர் கற்றவர்; சிவகோசரியார் கல்லாதவர்.

வேதம் ஓதில் என்? வேள்விகள் செய்யில் என்?
நீதி நூல்பல நித்தல் பயிற்றில் என் ?
ஓதி அங்கம் ஓர்ஆறும் உணரில் என் ?
ஈசனை உள்குவார்க்கன்றி இல்லையே ?

என்பது அப்பரடிகள் திருவாக்கு.

கற்ருர் யார் ? கல்லார் யார் ? என்ற இரண்டு வினுக்களுக்குரிய விடைகளை ஒன்ருக இணைத்துத் தருகிருர் அபிராமி அருள் பெற்ற அபிராமிப்பட்டர்.

இல்லாமை சொல்லி ஒருவர்தம் பாற் [சென்று இழிவுபட்டு
நில்லாமை நித்தம் நினைகுவிரேல் நித்தம் [நீடு தவம்
கல்லாமை கற்ற கயவர்தம் பால் ஒரு [காலத்தினும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே.

என்பது அபிராமி அந்தாதி.

இறைவியையே நீள நினைந்து உருகும் தவத்தைக் கற்றுக் கொள்ளாமல், தேவையற்றவைகளைக் கல்வியெனக் கொண்டு கற்ற கயவர்களிடம் ஒரு காலத்திலும் சென்று தங்காத திருவடிகளே இறைவியின் திருவடிகள் என்று குறிப்பிடுகிருர்.

இவ்வடிப்படையில் கற்ருர் கல்லார் என்ற சொற்களுக்குப் பொருளமைதி காண வேண்டும்.

# ஒழுங்கினைக் காப்போம்!
# உறவினை வளர்ப்போம்!
# உதவிகள் செய்வோம்!




இந்து சமயம் என்று தோன்றியது என்று கூறமுடியாத காலப் பழைமையுடையது. கடவுள் உண்டு; அது ஞானப் பொருள்; உயிர் உண்டு. அது அறியாமையின்பாற் பட்டது; ஆனாலும் அறிவுப் பொருளாதற்குரிய தகுதியுடையது. உயிர் அறியாமையினின்று விலகி ஞானத்தை அடைதலே வாழ்க்கையின் நோக்கம் என்ற மையக் கருத்தைச் சுற்றி வட்டமிட்டு வளர்ந்து வந்துள்ள பல நெறிகளை இணைப்பாகக் கொண்டது இந்து சமயம். இந்து சமயம் இந்திய நாட்டின் மாபெரும் சமயம்; மொழிகளைக் கடந்த சமயம்; இனங்களைக் கடந்த சமயம். ஆனாலும் பாய்ந் தோடுகிற ஆறு பாய்ந்து செல்லும் நிலப் பரப்புக்களிலெல்லாம் வளம் உண்டாக்குதல் போல இந்து சமயம் இந்திய நாட்டில் பேசப் பெறும் எல்லா மொழிகளுக்கும், எல்லா இனங்களுக்கும் வளம் சேர்த்திருக்கிறது. இவ்வளவு பெருமை பெற்ற சமயமாயினும் காலத்தின் விளைவான சலிப்புகளிலிருந்து உயிர்ப்புடன் காப்பாற்றிக் கொள்வதற்கான கொள்கை ஆக்கங்கள்-கோட்பாடுகளில் புதுப் பிப்புக்கள் இந்து சமயத்தில் தேவையான அளவு நடைபெறவில்லை. அது மட்டுமன்றி சில நன்னெறிகள்-மனிதர்களின் தன்னலத் தால்—உருமாறி தீநெறிகளாகி உள்ளன. அதனால் இந்து சமயம் தனது உயிர்ப்பு நிலையை இழக்காவிடினும், ஆக்கரீதியான வளர்ச்சியைப் பெற முடியவில்லையென்பது மறுக்க முடியாத உண்மை. இந்த நிலையில் தமிழகத்தில் இந்து சமயத்தைப் பேணி வளர்க்கத் தோன்றியுள்ள பேரவை, சில செயல் முறைகளை நடைமுறைப்படுத்துவது நல்லது.

ஒழுங்கினைக் காப்போம்!

பொதுவாக உடல் மூச்சினை இடையீடின்றி உயிர்த்தல் போல நெஞ்சு இறைவன் நாமத்தை இடையீடின்றி எண்ணிக் கொண்டே யிருத்தல் வேண்டும். இதுவே சமய நெறி நிற்போரின் உயர்சீலம். அடுத்து, குறைந்தது நாளொன்றுக்கு மூன்று வேளை காலை, உச்சிப் பொழுது, மாலை இறைவனை வணங்க வேண்டுமென்பது நியதி; மரபு. இந்த வழி பாட்டு முறையை இன்றைக்கு இந்துக்களில் பின்பற்றுபவர்கள், விரல் விட்டு எண்ணத் தக்க எண்ணிக்கையினரேயாம். நாள்தோறும் ஆலயம் தொழுவது நமது ஆன்றோர் மரபு. ஆனல் இன்று நாள்தோறும் ஆலயத்திற்குச் செல்பவர் எண்ணிக்கை இந்து சமய மக்கள் தொகையை நோக்க மிகக் குறைவு. பொது வாக இந்து சமூகத்தைச் சேர்ந்த மக்கள் திருவிழாவிற்குத் திருவிழா திருக்கோயிலுக்குச் செல்லும் பழக்கத்தை வளர்த்துக் கொண் டுள்ளனர். இந்தக் குறை நீங்கச் சில ஆண்டு களாகத் தமிழ்நாட்டில் வார வழிபாட்டு இயக்கங்கள் அறிமுகப்படுத்தப்பெற்றன. பேரவையின் தலையாய நோக்கம் வார வழிபாட்டினை சிறப்புறச் செய்தலேயாம். வார வழிபாடு என்ற சொல் திருமுறை வழக்குச் சொல். அதாவது அன்பினுல் செய்யும் வழிபாடு வார வழிபாடாகும். ஆனல் அது நடைமுறை யில் வாரத்துக் கொருமுறை செய்யும் வழி பாடாயிற்று. இந்த வார வழிபாட்டு முறை யிலும் போதிய ஒழுங்குகள் அமையவில்லை. ஊர்தோறும், கோயில்தோறும் வார வழிபாடு நிகழும் கிழமைகள் வேறுபடுகின்றன. ஆதலால் பொதுவாக இந்துக்கள் அனைவருக் கும் உகந்ததாகிய வெள்ளிக் கிழமையை வார வழிபாட்டு நாளாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல்; எல்லா ஊர்களிலும் வெள்ளிக் கிழமையன்றே வார வழிபாடு நிகழும். வார வழிபாடு நிகழ்த்த வேண்டிய காலம் மாலை 6-00 மணிக்கு என்ற நியதியை மேற்கொள்ளு தல். எல்லா ஊர்களிலும் வெள்ளிக்கிழமை தோறும் மாலை 6-00 மணிக்குக் கூடி வழிபாடு செய்வதென்ற ஒழுங்கு குறையைக் காப்பாற்ற வேண்டும். கிழமையும் குறித்த நேரமும் எக்காரணத்தைக் கொண்டும் யாருக்காகவும் மாறக்கூடாது. இந்துக்களாகப் பிறந்த யாவரும் நாடு முழுவதும் நிகழும் இந்த வார வழிபாட்டில் தவருது கலந்து கொள்வதைக் கடமையாகக் கொண்டு ஒழுகி ஒழுங்கைக் காப்பாற்றுவோமாக.

நமது வழிபாட்டில் நம்முடைய ஆன்ருேர்கள் கடைப்பிடித்தொழுகிய சில மரபுகளைக் கடைப் பிடித்தொழுக வேண்டும். திருக்கோயிலுக்கு வார வழிபாட்டுக்கு வருவோர் வரிசையில் ஒருவர் பின் ஒருவராக ஒழுங்கமைதியில் வழி பாட்டில் கலந்துகொள்ள வேண்டும். ஒரு வரைப் பின் தள்ளி ஒருவர் முன் போதல் உல கியலில் வேண்டுமானுல் தற்காலிகமான பலன்

கனைத் தரலாம். ஆனாலும் தீது. சமய வாழ்க்கையில் எல்லாம் வல்ல இறைவன் சந்நிதியில் ஒருவரைப் பின் தள்ளி ஒருவர் முந்துதல் அறமன்று; அருள் நெறியுமன்று. அப்பரடிகள் தமக்கு முன் வந்தவர்கள் பின் தாம் திருக்கோயிலுக்குள் புகுவதாகக் கூறியுள்ளார்.

"போதொடு நீர்சுமந் தேத்திப்
புகுவார் அவர்பின் புகுவேன்"

என்பது அப்பரடிகள் திருப்பாடல். ஆதலால் திருக்கோயில் வழிபாட்டில்-வார வழிபாட்டில் கலந்து கொள்பவர் பலர் வந்த வரிசையில் ஒழுங்கமைதியுடன் நின்று சென்று வழிபாட்டை நிகழ்த்தும் ஒழுங்கு முறையைக் காப்பாற்ற வேண்டும்.

பேரவை உறுப்பினர்கள் வார வழிபாட்டில் கலந்து கொள்வதைப் பேரவைக்குத் தாங்கள் செய்யும் கடமையாக ஏற்றுக் கொண்டு,கலந்து கொண்டு ஒழுங்குமுறையைக் காப்பாற்ற வேண்டும். தவிர்க்க முடியாதபொழுது விடுப்பு விண்ணப்பம் தர வேண்டும். விடுப்பு விண்ணப்பம் தந்தாலும் அவரிருக்கும் இடத்தில்-அவரிருக்கும் நிலையில் இசைந்தவாறு உணர்வு பூர்வமாக வழிபாட்டை நிகழ்த்துவதோடு மானசீக நிலையில் தாம் கலந்து கொள்ள வேண்டிய வார வழிபாட்டில் கலந்து கொள்ள வேண்டும். அவர் செல்லும் ஊர்களில் நிகழும் வார வழிபாட்டில் கலந்து கொள்ள வேண்டும். தொடர்ந்து மூன்றுமுறை வார வழிபாட்டுக்குத் தக்க காரணங்களின்றி, முறையான விடுப்பின்றிக் கலந்து கொள்ளத் தவறினால் பேரவை அந்த உறுப்பினரை அறிவுரை வழி, தண்டங்கள் வழி நெறி நிற்கப் பயிற்றுவிக்க வேண்டும். ஆக, வழிபாட்டில் ஒழுங்குமுறையைக் காப்பாற்றுதல் நம்முடைய இலட்சியம். ஒழுங்கு முறையைக் காப்பாற்றுவோமாக!

உறவினை வளர்ப்போம்!

இந்து சமுகம் மொழிகளைக் கடந்து, இனங்களைக் கடந்து வளர்ந்துள்ள ஒரு சமுகம். இயற்கையான மொழி, இன வேறுபாடுகள் தவிர்க்க முடியாதவை. ஆனால் இந்த மொழி, இன வேறுபாடுகள் மாறுபாடுகளாக-முரண்பாடுகளாக உருவம் கொள்ளக் கூடாது. ஆதலால், இந்து சமுகத்தைச் சேர்ந்தவர்கள் இந்திய மொழிகளின்பால் வெறுப்புணர்ச்சி காட்டாது, இந்திய மொழிகள் பலவற்றைக் கற்க முயல வேண்டும். மொழிகளில் வெறுப்புக் காட்டுதல் அறிவுக்குத் தடை விதித்துக் கொள்வதாகும்-இதை விட மனித குலத்துக்குப் பெரிய தற்கொலை எதுவும் இல்லை. தமிழில் பக்தியுணர்வை அள்ளி வழங்கும் திருவாசகத்தை அனுபவிப்போர் தெலுங்கில் உள்ள தியாகேசரின் பக்திக் கீர்த்தனைகளை, இந்தியில் உள்ள மீராவின் பக்திக் கீர்த்தனைகளைக் கற்கவும் கேட்கவும் முயலுதல் வேண்டும். இதனால் இதயம் விரியும்; பண்பாடு வளரும்; வாழ்க்கையின் நிலையாமைகளைப் பட்டினத்தார் பாடல்களில் படிக்கும் நாம் கபீர்தாசரின் அருள்மொழிகளைக் கற்றால் சிந்தனையின், இழையோட்டச் சிறப்புகளை உணரலாம். அப்பரடிகள், வள்ளற்பெருமான் ஆகியோரின் பழைமைக்கு உயிரூட்டும் புதுமை நல ஆக்கக் கருத்துக்களைக் கன்னட நாட்டு பசவேசரின் கருத்துக்களோடு ஒப்பிட்டுப் பார்த்து வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆதலால், இந்து சமுகத்தைச் சேர்ந்தவர்கள் சமய அடிப்படையில் இன, மொழி வேறுபாடுகளைக் கடந்து இந்துக்கள் அனைவரிடமும் உறவினை வளர்த்துக் கொள்ள வேண்டும். அதுவே இந்து சமுகத்தை வாழ்விக்கும் உயரிய நெறி. உடனடியான தேவையும்கூட. ஆதலால் இந்து சமுகத்தினரிடையில் இனம், மொழி வேறுபாடுகளைக் கடந்து உறவினை வளர்ப்போம்.

நம்முடைய நல்லூழின்மையின் காரணமாக இந்து சமுகத்தில் இயற்கையான இன, மொழி வேறுபாடுகள் மட்டுமல்லாமல் செயற்கையான சாதி வேற்றுமைகள் வளர்ந்துள்ளன. இந்தச் சாதி வேற்றுமைகள் தொடக்க காலத்தில் தொழில் வழி தான் அமைந்தன. ஆனால் காலப்போக்கில் இந்தச் சாதி வேற்றுமைகள் பிறப்பின் வழியதாக அமைந்து விட்டன. தொழிலியல் அடிப்படை

மேன்மைகொள் சமயநீதி

யில் அமையும் வேறுபாடுகள் மாறுபாடுகளை-முரண்பாடுகளை உண்டாக்காது; மிகப் பெரிய உயர்வு தாழ்வுகளையும் தோற்றுவிக்காது. தொழிலியற் வகுப்பு முறையில் பெருமைகள், மேற்கொள்ளப்படும் தொழிலின் அடிப்படையிலேயே அமையும்; பிறப்பில் அமையாது. ஆனால் நடைமுறையில் இந்து சமூகத்தில் சாதிகள் பிறப்பின் அடிப்படையிலேயே அமைந்து செயற்படுகிறது. இரண்டு சாதியினர்க்கிடையில் மலைக்கும் மடுவுக்குமிடையேயுள்ள மாறுபாடுகள் ஏன்? முற்றிய நஞ்சாகத் தீண்டாமையே உருப்பெற்றுவிட்டதே; இங்ஙனம் பிறப்பின் அடிப்படையில் சாதிவேறுபாடுகள் வளரத் தொடங்கியவுடன் இந்து சமூகத்தினரிடையில் வெறுப்பும் பகையும் ஆரோக்கியமில்லாத போட்டா போட்டிகளும் வளரத் தொடங்கி விட்டன. காலப்போக்கில் பழக்கத்தின் காரணமாகக் குடும்பங்களிடையே கூட இந்த நிலைமைகள் பரவிக் கால்கொண்டன. இந்த வேற்றுமைகளின் காரணமாகவே இந்து சமூகத்தினிடத்தில் பரஸ்பர நம்பிக்கை குறைந்து-நல்லெண்ணங்கள் குறைந்து-அவநம்பிக்கை மேலிட்டு எரிச்சலூட்டும் பிரச்சாரங்களும், பகைமூட்டும் இயக்கங்களும் தோன்றலாயின. இவற்றின் விளைவாகக் கோடானு கோடி மக்கள் மதமாற்றத்திற்கு ஆளாயினர். நம்முடைய இந்து சமூக வரலாற்றில் நிகழ்ந்த இந்தத் தீய விளைவுகளை நாம் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறுதல் கூடாது. ஆதலால், நம்முடைய இந்து சமூகத்தைச் சேர்ந்த அனைவரும் ஒருகுலமாகி, ஒரு குடும்ப உணர்வில் அன்பினைப் பெருக்கி, உறவினை வளர்ப்போமாக நம்முடைய சமூகத்தில் பலரோடு கூடிப் பழகி இதயத்தினை வளர்த்துக் கொள்வோமாக. இன்று நம்முடைய சமூகத்தில் பரவியுள்ள ஒருதீமை உறவின்வழி அன்பு காட்டுவது. இது தீது. ஒருபொழுதும் நாட்டுக்கும் சமூகத்திற்கும் இஃது ஆக்கம் தராது. அன்பின்வழி உறவுகள் வளர வேண்டும். உறவுவழித் தோன்றும் அன்பு, உறவுக்குரிய காரணங்கள் மாறுபடும் பொழுது, குறையும்; வற்றும். ஏன் முரண்பாடுகளாகக் கூட உருமாறி விடுகின்றன. நம்முடைய சமூகத்தில் நாள்தோறும் ஏற்படும் மனமுறிவுகள் அளப்பில. சாலை விபத்துக்களைச் செய்தியாக்குவதைப் போல மனமுறிவுகளைச் செய்தியாக்கினால் சிந்தனை கலங்கும். சிலர், மனமுறிவுகளைத் தவிர்க்க முயற்சி செய்யாமல் சாமர்த்தியமாகச் சமாளிக்க முயலுகின்றனர். வேறு சிலர், மனமுறிவுகளையே வெற்றி, தோல்விகள் ஆக்குகின்றனர். எது எப்படியாயினும் மனமுறிவுகள் வரவேற்கத்தக்கனவல்ல. ஆதலால், மனமுறிவுகள் தோன்றுதலுக்குரிய சூழல்களையே தவிர்த்திடுதல் வேண்டும். அதற்கு ஒரேவழி அன்புதான். அன்பிற்குத் தடையிருப்பன தன்னலமும், தன்முனைப்புமேயாம். தீமையைக் கூட ஒறுத்தலின் மூலம் ஒருபொழுதும் மாற்ற இயலாது. தீமையுடையாரையும் கூட உவந்து, கலந்து பேசி மாற்றுதலின் மூலமே நிலையான அடிப்படையில் தீமை மாறும். ஆனால் நன்மையில்லாதார் ஒருவர் தீமையை அந்தத் தீமையின் காரணமாகவே தாம் நன்மையுடையார்போல் காட்டிக் கொள்ளும் தீய பழக்கத்தால்தான் மனித உறவுகள் பாதிக்கின்றன. ஆதலால், எந்தக் காரணத்தையும் மனத்திற் கொள்ளாமல் அன்புகாட்ட வேண்டும். அன்பு காட்டுவதே குறிக்கோள்.

அன்பின்வழி சிலரிடத்தில் உறவு வளரலாம். சிலரிடத்தில் உறவு வளராமல் நிற்கலாம். ஆனால், அடிப்படையான அன்பு இருப்பதால் உறவு வளராது போனாலும் பகை தோன்றாது. தீமையும் தோன்றாது. ஆதலால் இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் சமய அடிப்படையில் இந்துக்களாக வாழ்வோர் அனைவரிடமும் எந்த வேறுபாடும் பாராட்டாமல் அன்பாகக் கலந்து பேசிப் பழக வேண்டும். உண்ணும்பொழுதுகூட உறவு கலந்து உண்ணச் சொன்னாரே தாயுமானார். ஆதலால், இந்து சமூகத்தினில் உறவு கலந்து பழகுதற்குரிய வாய்ப்புகளைத் தோற்றுவித்துக் கொள்ள வேண்டும். அவ்வழி அன்பினைக் காட்ட வேண்டும்; அன்பினைப் பெறவேண்டும். அவ்வழி இந்து சமயத்தின் உயர் கொள்கையாகிய ''ஒன்றே குலம்''

## விளங்குக உலகமெல்லாம்

என்ற உயரிய கொள்கை நடைமுறைப் படுத்தப் பெறவேண்டும். அப்படியானல் ஆசாரங்கள் என்ன ஆவது? என்று சிலர் கேட்கலாம். ஆசாரமுடையவரிடம் பழகுவதன் மூலம் மற்றவரும் ஆசாரமுடையவராக மாறி வளர்வார்கள். சீலமுடையார் சீலமில்லாதவருடன் பழகுவதன் மூலம் சீலம் பெறுவர். இதுவே நடைமுறை உண்மை. ஆதலால், இந்து சகத்தினிடத்தில் உறவினை வளர்ப்போம்!

உதவிகள் செய்வோம்!

மனித குலத்தின் உயிர்நிலை ஒருவருக்கொருவர் உதவி செய்தலில்தான் ஜீவித்துக் கொண்டிருக்கிறது. உயிர்க் குலத்தில் இயல்பாகவுள்ள வேறுபாடுகள்கூட உயிர்க் குலத்தின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் தேவையான உதவிகளை ஒருவருக் கொருவர் செய்து கொள்ளத்தான் போலும். இயற்கையில் ஒன்று புளிக்கிறது; ஒன்று காரமாக இருக்கிறது. தோற்றத்தில் வேறுபாடுகள்! செயல் முறையில் பயன்படுவதில் ஒருமைப்பாடு; உயிர்க்குலத்தின் ஆக்கம்; வாழ்வு-இதுதானே உண்மை! உதவியென்ற அடிப்படையில்தான் வேளாண்மை நடைபெறுகிறது; தொழிலுலகம் செயற்படுகிறது. ஆனல், காலப்போக்கில் உதவியென்ற இந்த மனப்பான்மை அருகி நாட்டில் ஏழ்மையும் வறுமையும் வளர்ந்து விட்டன. இந்து சமூகத்தில் மிக அதிகமான மக்கள் வறுமையிலும், ஏழ்மையிலும் உழல்கின்றனர். இந்து சமூக மக்கள் மதமாற்றங்களுக்கு ஆளானதற்கு மிக முக்கியமான காரணம் வறுமையும், ஏழ்மையுமே என்பதை எளிதில் மறந்துவிட முடியாது. இன்றும் ஓர் இந்துவுக்குச் சமய அடிப்படையில்-சமூக அடிப்படையில் உத்தரவாதமில்லை என்ற வேதனை நிறைந்த உண்மையை நாம் உணர்ந்து, செயற்படும் நாளே இந்து சமூகத்தின் பொன்னுள்! ஆதலால், ஒவ்வொரு இந்துவும், இந்து சமூகத்தின் அனைவருடைய மேம்பாட்டுக்கும் உதவி செய்யும் மனப்பான்மையில் தம்மை வளர்த்துக் கொள்ள வேண்டும். இந்த உதவி இரக்கத்தின் அடிப்படையில் தோன்றுதல் கூடாது. உரிமை, கடமை என்ற அடிப்படையில் தோன்ற வேண்டும். இந்த உதவி தரும உணர்ச்சியில் மட்டும் நடைபெறக் கூடாது. முறையான ஆக்க ரீதியான உதவியாக அமையவேண்டும். ஆதலால், ஒவ்வொரு இந்துவும் குறிப்பாக-தெய்விகப் பேரவை உறுப்பினர் ஒவ்வொருவரும் தம்முடைய வருவாயில் ஒரு குறிப்பிட்ட நியாயமான விழுக்காட்டு நிதியைச் சமூகப் பாதுகாப்பு நிதிக்கு முறையாகத் தர வேண்டும். அந்த நிதி இந்து சமூகத்தில் நலிந்தவர்களுடைய மேம்பாட்டுக்கு ஆக்கபூர்வமான வழியில் பயன்படுத்தப் பெறும்; இந்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் படி முறையில் எல்லா நலன்களும் பெற்று வாழத் தக்கவகையில் வளர்க்கப் பெறுதல் வேண்டும். இந்து சமூகத்தின் மேம்பாட்டுக்குத் தொண்டு செய்தல்-உதவி செய்தல் இந்து சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரின் தலையாய கடமை என்பதை உணரவேண்டும். இந்து சமூகத்தில் எந்தவொரு மனிதன் நலிவுற்றாலும் காலப்போக்கில் இந்து சமூகத்தின் மொத்த உருவமும் பாதிக்கும் என்பதை நாம் உணரவேண்டும். ஆதலால், ஒவ்வொரு உறுப்பினரும் இந்து சமூகத்திற்கு உதவிகளைச் செய்து அதனை வாழ்விக்க முன் வரவேண்டும். ஆதலால் உதவிகள் செய்வோம்!

பேரவை இந்து சமூகத்திற்கு நடைமுறையில் தரும் கோட்பாடுகள்:

"ஒழுங்கினைக் காப்போம்!

உறவினை வளர்ப்போம்!

உதவிகள் செய்வோம்!"

என்பனவாம். இந்த மூன்று கோட்பாடுகளைச் சிந்தனையாலும் செயலாலும், அக நிலையிலும் புறநிலையிலும் பேரவை அங்கத்தினர் ஒவ்வொருவரும், ஒவ்வொரு கிளையும் நடைமுறைப்படுத்த வேண்டும். இந்தக் கோட்பாடுகள் முழுமையாக நடைமுறைப்படுத்தப் படுமானல் இந்து சமூகத்தினர் பக்தியில் சிறப்பர்; ஞானத்தினைப் பெறுவர்; உறவிற் கலந்து ஒருகுலமாக வாழ்வர்; இந்துக்கள் அனைவரும் இன்புற்று வாழ்வர். பேரவையும் அதன் இலட்சியத்தினை அடையும்.

—:o:—

"சமுதாயமும் தமிழும் தழைத்து இனிது ஓங்குக!"

## சிவபுராணம்

*சிவனது அநாதி முறைமையான பழமை*

(திருப்பெருந்துறை)

கலிவெண்பா

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க
ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப்பிறப் பறுக்கும் மன்னனடி போற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய உரைப்பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னும்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குமாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றா பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

# திருமுறை அறிமுகம்

## (3)

புற்று மூடிக் கறையான் வாய்ப்பட்டுக் கிடக்கும் தேவார ஏட்டுத் தொகுதிகளைக் கண்டு மனங்கவன்ற வேந்தன் தக்கவாறு எண்ணெய் பெய்து தூய்மை செய்து, ஏட்டுக் குவியலை வெளியே எடுத்து வரச் செய்தான். சிதைந்து பட்ட ஏடுகள் பலவாயிருப்பதறிந்து வருந்திய மன்னன் உள்ளம் தெளிவு அடையுமாறு, 'வேதச் செந்நெறித் தலைவர் எனும் மூவர் பாடல், வேய்ந்தன போல் மண்மூட செய்தே ஈண்டு வேண்டுவன வைத்தோம்' என்று ஓர் அசரீரி வானத்தெழுந்தது. அதனால் ஆறுதலெய்திய அரசன் சிதையாத ஏடுகளை ஒன்று திரட்டி அவற்றைத் தொகுத்து முறைப்படுத்துமாறு நம்பியாண்டார் நம்பியை வேண்டிக் கொண்டான். அவரும் அப்பதிகங்களைத் தொகுத்து வகுத்து ஏழு திருமுறைகளாகச் செய்தார். திருஞானசம்பந்தர் பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் பதிகங்கள் நான்கு, ஐந்து, ஆறும் திருமுறைகளாகவும், சுந்தரர் பதிகங்கள் ஏழாந் திருமுறையாகவும் வகுக்கப்பட்டன. முதன்முதலாகத் தோடுடைய செவியன் எனத் தொடங்கித் தேவாரப் பதிகங்கள் பாடத் தொடங்கியவர் திருஞானசம்பந்தரே எனக் கொண்டு அவருடைய பதிகங்களே திருமுறையின் முதலில் தொகுக்கப் பட வேண்டும் எனக் கருதி அவர் பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாக வகுத்தமைக்கப்பட்டுள்ளன வாகக் கூறுகின்றனர். சம்பந்தர் பாடல்கள் முதலில் அமைக்கப்பட்ட இம்முறை வைப்பிற்கு இக்காரணத்தினும் சிறந்த காரணம் கூறலாம். தேவார ஆசிரியர்கள் மூவரிலும் முதலில் இறைவன் திருவருளிற் கலந்த கால அடைவு முறையே ஏற்புடையதாக ஆராய்ச்சியாற் புலனாகின்றது. ஒரே காலத்தில் வாழ்ந்தவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரில் ஞானசம்பந்தரே முதலில் இறைவன் திருவருளிற் கலந்தார் என்பது ஆய்வுதரும் உண்மையாகும்.

இசை நலங் கனிந்த தேவாரத் திருப்பதிகங்களுக்கு உரிய பண்களைத் தேர்ந்தறிந்து அம்முறையிற் பாடுதற்குதவுமாறு, அவற்றிற்கு இசையமைக்க விரும்பிய வேந்தன் நம்பியாண்டாரோடு திருஎருக்கத்தம்புலியூர் சென்று அங்குள்ள இறைவனிடம் வேண்டிக் கொண்டான். இறைவனும் வேந்தன் விருப்பத்தை நிறைவேற்ற எண்ணித் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒரு பெண்ணிற்கு இசைத்திறம் நல்கியுள்ளோம் என்று வானொலியாகக் கூறக்கேட்ட வேந்தன், அப்பெண்ணைத் தேடி அழைத்து வந்தான். அப்பெண்மணியைத் தில்லைக்கு அழைத்துச் சென்று, இசையமைத்துக் கொள்ளுமாறு, வானொலி வாயிலாகக் கூறக் கேட்ட மன்னன் அவ்வாறே, அப்பெண்ணை அம்பலத்தாடும் ஐயன் திருமுன்பு இருத்திப் பண்ணடைவு செய்து தருமாறு வேண்டிக்கொண்டான். அப்பெண்ணும் இறைவன் திருவருள் துணைக்கொண்டு தேவாரப் பதிகங்களுக்கு இசை வகுத்தருளினார். இதனைத் திருமுறை கண்ட புராணம் பின் வருமாறு கூறுகின்றது :—

" நல்லிசை யாழ்பாணர் நன்மரபின்
[வழிவந்த
வல்லி ஒருத்திக் கிசைகளை வாய்ப்ப
[அளித்தோம் என்று
சொல்ல அவள்தனை அழைத்துச் சுருதி
[வழிப் பண்தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பி
[இறைவன் மகிழ்ந்தார்"




பின்னர் மணிவாசகர் பாடிய திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாக அமைக்கப்பட்டன. இவ்வாறே ஏனைய திருமுறைகளும் வகுக்கப்பட்டுப் பன்னிரு திருமுறை என்னும் தொகுப்பு நிறைவேறியது. பன்னிரு திருமுறை அமைப்பில் அடங்கும் தெய்வத் திருப்பனுவல்கள் பின் வருமாறு :

| | | |
|---|---|---|
| 1, 2, 3-ஆம் திருமுறைகள் | ... | திருஞானசம்பந்தர் பதிகங்கள் |
| 4, 5, 6-ஆம் திருமுறைகள் | ... | திருநாவுக்கரசர் பதிகங்கள் |
| 7-ஆம் திருமுறை | ... | சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகங்கள் |
| 8-ஆம் திருமுறை | ... | மாணிக்கவாசகர்-திருவாசகம், திருக்கோவையார் |

9-ஆம் திருமுறை

| | | |
|---|---|---|
| 1 திருமாளிகைத்தேவர் | | |
| 2 சேந்தனர் | | |
| 3 கருவூர்த்தேவர் | | |
| 4 பூந்துருத்திநம்பிகாடநம்பி | | |
| 5 கண்டராதித்தர் | | திருவிசைப்பா |
| 6 வேணுட்டடிகள் | | |
| 7 திருவாலியமுதர் | | |
| 8 புருடோத்தமநம்பி | | |
| 9 சேதிராயர் | | |
| சேந்தனர் | ... | திருப்பல்லாண்டு |
| 10-ஆம் திருமுறை | ... | திருமூலர்-திருமந்திரம் |
| 11-ஆம் திருமுறை | | |
| 1 திருவாலவாயுடையார் | ... | திருமுகப்பாசுரம் |
| 2 காரைக்காலம்மையார் | ... | 1. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், 2. மூத்த திருப்பதிகம், 3. திருவிரட்டைமணிமாலே, 4. அற்புதத் திருவந்தாதி. |
| 3 ஐயடிகள் காடவர்கோன் | ... | 1. க்ஷேத்திரத் திருவெண்பா. |
| 4 சேரமான் பெருமாள் நாயஞர் | ... | 1. பொன்வண்ணத்தந்தாதி, 2. திருவாரூர் மும்மணிக் கோவை, 3. திருக்கைலாய ஞானஉலா |
| 5 நக்கீரத்தேவ நாயஞர் | ... | 1. கைலேபாதி காளத்தி பாதி அந்தாதி<br>2. திருஈங்கோய் மலே எழுபது, 3. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, 4. திருவெழு கூற்றிருக்கை<br>5. பெருந்தேவபாணி, 6. கோபப்பிரசாதம்<br>7. கார் எட்டு, 8. போற்றித் திருக் கலிவெண்பா<br>9. திருமுருகாற்றுப்படை, 10. திருக்கண்ணப்ப தேவர் திருமறம். |
| 6 கல்லாடதேவ நாயஞர் | ... | 1. திருக்கண்ணப்பதேவர் திருமறம். |
| 7 கபிலதேவ நாயஞர் | ... | 1. மூத்தநாயஞர் திருஇரட்டை மணிமாலே<br>2. சிவபெருமான் திருவிரட்டை மணிமாலே<br>3. சிவபெருமான் திருவந்தாதி. |
| 8. பரணதேவ நாயஞர் | ... | 1. சிவபெருமான் திருவந்தாதி |
| 9. இளம்பெருமானடிகள் | ... | 1. சிவபெருமான் திருமும்மணிக் கோவை |
| 10. பட்டினத்துப் பிள்ளேயார் | ... | 1. கோயில் நான்மணிமாலே<br>2. திருக்கழுமல மும்மணிக்கோவை.<br>3. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை<br>4. திருவேகம்ப முடையார் திருவந்தாதி<br>5. திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது |
| 11. நம்பியாண்டார் நம்பி | ... | 1. திருநாரையூர் விநாயகர் இரட்டை மணிமாலே<br>2. கோயில் திருப்பண்ணியர் விருத்தம்<br>3. திருத்தொண்டர் திருவந்தாதி<br>4. ஆளுடையபிள்ளேயார் திருவந்தாதி<br>5. ஆளுடையபிள்ளேயார் திருச்சண்ணப விருத்தம்<br>6. ஆளுடையபிள்ளேயார் திருமும்மணிக் கோவை<br>7. ஆளுடையபிள்ளேயார் திருவுலா மாலே<br>8. ஆளுடையபிள்ளேயார் திருக்கலம்பகம்<br>9. ஆளுடையபிள்ளேயார் திருத்தொகை<br>10. திருநாவுக்கரசர் திரு ஏகாதச மாலே |
| 12-ஆம் திருமுறை<br>சேக்கிழார் | ... | திருத்தொண்டர்புராணம் (பெரியபுராணம்) |

பன்னிரு திருமுறைகளுள்ளும் நம்பியாண்டார் நம்பியவர்களால் முதற்கண் தொகுக்கப்பட்டன மூவர் தேவாரங்களடங்கிய முதல் ஏழு திருமுறைகளேயாகும். நம்பியாண்டார் பொல்லாப் பிள்ளையார் திருவருளால் ஏழு திருமுறைகளைத் தொகுத்த வரலாற்றைத் திருமுறை கண்ட புராண ஆசிரியர் கூறுங்கால், அவற்றை முன்போலவே வகைப்படுத்த நினைத்து அவ்வாறே வகைப்படுத்தினர் என்னும் கருத்தில், "எழில் முறையை முன் போல வகுக்க எண்ணி" என்று கூறியுள்ளார். இதனால் நம்பியாண்டார் திருமுறைகளைத் தில்லையில் தொகுக்கு முன்னரே, திருமுறை என்னும் பெயரால் அவை திரட்டப்பட்டிருந்த குறிப்புத் தெரிகின்றது.

ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தலங்கள் தோறும் பாடிச் சென்று பக்தி நெறியைப் பரப்பிய நாலே, அவர்களுடன் சென்றவர்கள் அப் பதிகப் பாடல்களை எழுதிப் போற்றிப் பயின்று பயன்கொண்டனர். அத்தலப் பெருமக்கள் தத்தம் தலப்பதிகங்களைத் தங்கள் திருக்கோயில்களிலும், இல்லங்களிலும் பாடி இன்புற்றனர். இவ்விருவர் பாடிய தேவாரப் பதிகங்களே முதன் முதலில் திருமுறை என்று சைவப் பெருமக்களாற் போற்றப்பட்டு வந்துள்ளன.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருத்தொண்டத் தொகையுள் இடம் பெற்றுள்ள கணநாத நாயனர், ஞானசம்பந்தருக்குப் பின்னர்ச் சீர்காழித் திருப்பதியில் தோன்றியவராவார், அவர், இறைவனுக்குக் கைத்திருத்தொண்டு புரியும் கடப்பாட்டினில் அடியவர்களுக்குப் பயிற்சி யளித்து வந்தார். சைவ அடியார்கட்குச் சமய அறமும், தொண்டு நெறியும் இவையெனப் பயிற்றுவிக்கும் கல்லூரியாகவே அவர்தம் தொண்டு விளங்கியது.

நந்தவனம் அமைத்தம், மலர் கொய்தல், மாலைதொடுத்தல். திருமஞ்சனமாட்டல், அலகிடுதல், மெழுக்கிடுதல், விளக்கெரித்தல், திருமுறை எழுதுதல். திருமுறை வாசித்தல் ஆகிய பணிகளில் ஈடுபட விரும்பும் அடியவர்கட்கு அச்செயல்கள் நன்கு விளங்க வேண்டி அதற்குரியனவெல்லாம் செய்து வந்தார். இதனைச் சேக்கிழார்,

"நல்ல நந்தன வனப்பணி செய்பவர்
நறுந் துணர் மாலை கொய்வோர்
பல் பணித் தொடை புனைபவர்
கொணர் திரு மஞ்சனப் பணிக்குளோர்
அல்லுநன் பகலுந் திரு
அலகிட்டுத் திருமெழுக்கமை போர்கள்
எல்லையில் விளக் கெரிப்பவர்
திருமுறை எழுதுவோர் வாசிப்போர்
இனைய பல்திருப் பணிகளில்
அணைந்தவர்க் கேற்ற அத்திருத்தொண்டின்
வினை விளங்கிட வேண்டிய குறையெலாம்
[முடித்து

என்று குறிப்பிடுகின்றார்.

கணநாதர் வரலாற்ருல், திருமுறை என்பது அவர் காலத்தில் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் ஆகிய இருவர் பாடிய பாடல்களின் தொகுதியே என்பதும், அவற்றைச் செம்மையாக எழுதுவதற்கும் பாடுவதற்கும் பயிற்சி பெற்ற அடியார்கள் இருந்தனர் என்பதும் அவற்றை அடியார்கள் காதலோடு பாடிக் கசிந்துருகுவதனை இறைவன் கேட்டுகப்பார் என்றும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் தேவாரத்தில் குறிப்பிடுகின்ருர்.

"நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்
கரையனும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை"

என்பது சுந்தரர் திருவாக்காகும்.

இன்று திருக்கோயில்களில் மலர் கொணர்ந்து மாலை அமைப்பாரும் மஞ்சன நீர் கொணர்வாரும், அவற்றை இறைவனுக்கு இட்டு அர்ச்சிப்பாரும் திருமுறை ஓதுவாரும் எனப் பலர் இருக்கும் நிலையைக் காண்கின்ரேம். ஒருகாலத்தில் போதும் புனலும் கொணர்ந்து இறைவனுக்கு இட்டு புகழ்மாலை கூறி வழிபடுவோர் ஒருவராகவே இருந்து வந்திருக்கும் குறிப்பினைத் திருமுறைகளால் உணரலாகும். 'போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்' என்னும் அப்பரடிகளின் திருவாக்கு, போதும் புனலுங் கொண்டு புகழ்ந்து பாடிச் சென்று அடியார்களுடன் வழிபடும் நிலையினைக் காட்டுகின்றது. அந்நிலையில் அடியார்கள் அங்கு அகமுருகப் பாடியன நல்ல தமிழ்ப் பாடல்களே என்பதனை 'வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய், விண்ணேர் பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய், பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ் மேலாகப் பதைத்துருகுமவர்" என்னும் திருவாசகம் அழகாகக் காட்டுகின்றது. பாட்டின் பொருளுணர்ந்து பாடி ஏத்துவதும், அதனை அவ்வாறே கேட்டுணர்ந்து பரவுவதும் பக்தி உலகில் இன்றியமையாதனவாகும் என்பதனை மணிவாசகர் உணர்த்துகின்ருர்.

பிறமொழி ஆதிக்கம் திருக்கோயிலில் நுழைந்த பிறகு இறைவனை அருச்சிப்போர் ஒருவராகவும்-ஒரு சாதியினராகவும், திருமுறை பாடுவார் வேருெருவராகவும்-வேறு சாதியினராகவும் மாறிய நிலை தோன்றியது. மீண்டும் திருக்கோயில்களில் திருமுறைத் தமிழ் செல்வாக்குப் பெறவும், அத்தெய்வத் தமிழில் வழிபாடு நிகழ்வதைக் கேட்டு அன்பர்கள் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி நன்நெறி நிற்கவும் வேண்டும் என்பதற்காகவே அருள்நெறி இயக்கம் தோன்றலாயிற்று.

எழுதும் கருவி மாறி, அச்சுக்கலை தோன்றிய நிலையில் திருமுறை எழுதுவார் பணிக்கு வாய்ப்புக் குறைந்தது. ஆனல் திருமுறை வாசிப்பார் பலர் இன்றும் தொடர்ந்து ஓதுவார் என்னும் சிறப்பில் திருமுறை ஓதும் மரபில் நின்று தொண்டு புரிந்து வருகின்றனர்.




## (5) கண்ணன்

கடவுளை இல்லை என்பவனுக்கும் முக்தி :

அன்றொரு நாள் ஆயர்பாடியில் ஒரே ஆரவாரம். பிடி, அடி என்று பெருங்கூட்டமாகத் துரத்தி வருகிறார்கள். சிறுபிள்ளையான கண்ணன் அலைகுலையத் தலைகுலைய ஓடிவருகிறான். தளர் நடையும் பெரு நடையுமாகத் தெருவில் ஓடிவருகின்றான். அரைச்சதங்கையும் கால் சதங்கையும் ஒலிக்க ஓடிவருகின்றான். உடம்பெல்லாம் வெண்ணெய்; தயிரும் பாலும் குடித்து-பாத்திரங்களை உருட்டி யார் கையிலும் அகப்படாமல் ஓடி வருகின்றான். அபயம் அபயம் என்று கூக்குரலிடுகிறான். தெருக் கோடிவரை ஓடி வந்துவிட்டான். காற்றை விடக் கடியவேகத்தில் ஓடும் கண்ணனைக் கோபிமார்களான ஆயர்பாடிப் பெண்களால் பிடிக்க முடியவில்லை. ஆனால் அவன் ஓடும் காட்சியைக் காண முடிகின்றது.

அங்கே ஒரு குடிசை வீடு. வீட்டுத் திண்ணையில் வயதான கிழவர் அமர்ந்திருக்கிறார். அவர் திருவடிகளில் சரணம் என்று விழுந்து என்னைக் காப்பாற்றுங்கள் என்று வேண்டுகின்றான் கண்ணன்! ஆம்! மூவரும் தேவரும் தேடிக் காணமுடியாத எம்பெருமான் கண்ணன், திருப்பாத கமலங்கள் சிவக்கத் தெருவெல்லாம் ஓடிச் சரணமடைகின்றான். பார்த்தார் முதியவர்; கோர்த்து வாரிக் கட்டிய தலைமுடியையும்–அம்முடியில் அசையும் மயில்தோகையையும் காண்கிறார். திருநெற்றியில் சுட்டி அசைய செங்கண்கோடிச் செய்ய வாய் கொப்பளிப்பதையும் காண்கிறார். வேர்த்து விதித்து நடுங்குவதையும் பார்க்கிறார். ஐயோ பாவம் என்கிறார்! அவனே என்னைக் காப்பாற்றுங்கள் என்கிறான். எல்லாம் ஒரு நொடிப்பொழுதுதான். பெரியவர் உள்ளம் நெகிழ்ந்தது. உடனே வேகமாக எழுந்து கண்ணனை வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்றார். அந்தச் சிறிய வீட்டில் ஒளிந்து கொள்ளத் தனி அறைகள் இல்லை. ஆயர்பாடியின் இடையர் வீடாகையால் பெரிய பெரிய பானைகளும் தயிர்ச்சட்டிகளுமே இருந்தன. மாயக்கண்ணன் ஒருமுடிவுக்கு வந்தான். ஒரு பெரிய தயிர்ப்பானையாலே தன்னை மூடி மறைக்க வேண்டினான். பெரியவரும் பெரிய தாழியை அவன் மேல் கவிழ்த்து மூடி மறைத்து விட்டார். தெரு வாசலில் வந்து அமர்ந்து விட்டார்.

வீட்டு வாசலில் ஒரே கூட்டம். அத்தனைப் பெண்களும் அங்கே வந்துவிட்டார்கள். ஆம், இந்த வீடுவரை கண்ணன் ஓடி வந்ததை நாங்கள் கண்டோம். எங்கே கண்ணன் என்று கோபமும் தாபமும் பொங்கக் கேட்டார்கள். கிழவனே எனக்கு ஒன்றும் தெரியாது. இங்கு வரவில்லை. நான் பார்க்கவில்லை என்று ஒரு பெரும் பொய்யைச் சொன்னான். அவர்கள் நம்பவில்லை. உள்ளே போனார்கள். எங்கும் தேடினார்கள். காணவில்லை. எப்படியோ கண்ணன் நம் கையில் அகப்படாமல் ஓடி விட்டானே என்று ஏங்கி இளைத்து மனம் சோர்ந்து வீடு திரும்பினார்கள்.

கா. அ. மணவாளன், எம்.ஏ.,பிஎச்.டி.

தயிர்த் தாழிக்குள்ளே மூச்சையடக்கிப் பெரு நோவு கொண்டிருந்த கண்ணன் மெதுவாக வெளியே வந்தான். பெரியவரை நன்றியோடு வணங்கி நின்றான். இன்று என்னைக் காப்பாற்றினீர்கள் என்று நன்றிப் பெருக்கோடு பார்த்தான். அங்கமலக் கண்ணனை, ஆயர் பாடிச்செல்வனை, தேவகி சிறுவனை, தேவர்கள் சிங்கத்தை-யசோதை இளங்கன்றை ஏறஏறப் பார்த்தார் பெரியவர். அவன் அழகிலே தன்னை இழந்து ஆனந்தக் கண்ணீர் வடித்தார். குழந்தைக் கண்ணனுக்கோ அப்பெரியவருக்கு ஏதேனும் கொடுக்க வேண்டுமென்ற எண்ணம்! கேட்டான் கண்ணன். பெரியவரே உங்களுக்கு எதையேனும் கொடுக்க வேண்டுமென்று எனக்கு ஆசையாக இருக்கிறது, கேளுங்கள் தருகின்றேன் என்றான். பெரியவரோ கண்ணா! வயதான எனக்கு இவ்வுலகில் என்னப்பா வேண்டும். ஒன்றும் வேண்டாம் என்றார். கண்ணனோ எல்லோரும் மிக விரும்பும் மோக்ஷமாகிற முக்தியையே உமக்குத் தருகின்றேன், வேண்டுமா என்றான். அவரோ நான் உனக்கு அப்படி என்ன உதவி செய்து விட்டேன். ஒன்றும் செய்யவில்லை. நீ உள்ளே இருக்கவும் 'இல்லை' என்று பொய்தானே சொன்னேன். மேலும் உன்னை நான் காப்பாற்றவில்லை. இந்தத் தயிர்ப்பானை தான் உன்னைக் காப்பாற்றியது. மோக்ஷம் எனக்கு மட்டும் கொடுத்தால் பயனில்லை, இந்தத் தயிர்ப்பானைக்கும் மோக்ஷம் கொடுப்பதானல் சரியாக இருக்கும் என்று சொன்னார்.

பெரியவர் மொழிகளைக் கேட்ட கண்ணன் அவருடைய அடக்க உணர்வையும், தயிர்ப்பானைக்கு அவர் மோட்சம் கேட்கும் பாங்கினையும் எண்ணி வியந்தான். உடனே பெரியவரே உமக்கும் உமது விருப்பப்படியே என்னை ஆயர் பாடிப் பெண்களின் அடி-உதைகளினின்றும் காப்பாற்றிய இப்பானைக்கும் மோக்ஷம் கொடுத்தேன் என்று அவருக்கு அருள் பாலித்துவிட்டுச் சென்றான். அப்பெரியவருக்கு ததிபாண்டர் என்று பெயர். ஆம்! வேதங்களும்-உபநிடதங்களும் புராண இதிகாசங்களும் ஆழ்வார்களுடைய திவ்வியப்பிரபந்தங்களும் இறைவன் உண்டு, அவனுக்கு வடிவம் உண்டு, அவனுக்கு குணம் உண்டு-என்றெல்லாம் 'உண்டு' என்ற சொல்லாலே உணர்த்தி வரும் பொழுது ஆயர் சேரியிலே ஒருவர் இறைவனை உள்ளே மறைத்து வைத்து-வெளியில் 'இல்லை' என்று சொல்லி-அப்படி இல்லை என்று சொன்னதாலேயே அவர் மோக்ஷம் பெற்றதும்-அவர் விருப்பப்படியே தயிர்ப்பானையும் மோக்ஷம் பெற்றதுமாகிய வரலாற்றை வைணவ மரபிலே ஆசாரியர்கள் இன்றும் சுவையாகச் சொல்லி அனுபவிக்கின்றார்கள். இந்த அனுபவ சுவைக்கெல்லாம் ஆழ்வார்களுடைய பாடல்கள் தான் காரணம் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

பெரியாழ்வார் பாடிய பண்ணார் தமிழிசையில் கண்ணன் வெண்ணெய் களவு கொண்டதும் பெண்கள் களவு கொண்டதுமாகிய பாடல்களில் சில வரிகளைச் சுவைப்போம். வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள் நிறைந்த திருவாய்ப்பாடியில் காலை, நண்பகல், மாலை என்று முப்போதிலும் ஆய்ச்சிகள் வெண்ணெய் கடைகின்றனர். கடைந்த வெண்ணெயையும், தயிரையும் உறிகளிலே வைத்து விட்டு வெளியே போயிருக்கிறார்கள். அந்த நேரத்தில் தங்கள் தோள்களிலே காவடியில் சுமந்து வந்து குடம்குடமாகப் பாலையும் வைத்திருக்கிறார்கள் வெளியூர்க்காரர்கள். கண்ணன் இதுதான் சமயம் என்று எண்ணி ஆயிரம் தோழர்களோடு அந்த வீட்டுக்குச் சென்றான்.

---

கல்வி இருதரப்படும். ஒன்று பொதுக்கல்வி மற்றொன்று சிறப்புக் கல்வி. பொதுக்கல்வி எல்லோருக்கும் தேவையான சில பொது அறிவு தரும் செய்திகளைக் கற்றுக் கொள்வதாகும். சிறப்புக் கல்வி என்பது தன் தகுதியினை மேலும் உயர்த்திக் கொள்ளக் கற்பதாகும்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

---

அவ்வளவு வெண்ணெயையும், தயிர், பால் முதலியவைகளையும் எல்லாருமாக உண்டு ஏப்பம் விட்டுவிட்டார்கள். இவ்வளவையும் உண்டும்கூட அக்கண்ணனுக்குப் பசியடங்க வில்லையாம். அப்பொழுதுதான் கம்ஸனாலே ஏவப்பட்ட பூதனை என்கின்ற அரக்கி பெற்ற தாய் போலே வருகிறாள். மாயக்கண்ணனும் அழுகின்றான். அழுகின்ற அக்குழந்தையை யெடுத்து மடிமீது அமர்த்தி முலைப்பால் கொடுப் பது போல விஷப்பாலைக் கொடுத்துக் கொல்ல நினைத்தாள். ஆனால் கண்ணனோ அவளுடைய முலைப்பாலைப் பருகுவதுபோலே அவளுடைய உயிரையே குடித்து விழுங்கி விட்டான். இக் கருத்துக்களை இசைக்கும் ஆழ்வாருடைய சில பாடல் வரிகளைக் காண்போம்.

முப்போதும் கடைந்தீண்டிய
வெண்ணெயினோடு தயிரும் விழுங்கிய
கப்பாலாயர்கள் காவிற்கொணர்ந்த
கலத்தொடு சாய்த்துப் பருகி
மெய்ப்பாலுண்டழு பிள்ளைகள்போல
நீவிம்மி விம்மி அழுகின்ற
அப்பா உன்னை அறிந்து கொண்டேன்
உனக்கஞ்சுவன் அம்மந்தரவே.

என்கிறார். அக்கண்ணன் ஆயிரம் தோழர் களோடு வந்ததையும் பூதனையென்னும் அரக்கி யின் உயிரை உண்டதையும்,

தன்னேராயிரம் பிள்ளைகளோடு
தளர்நடையிட்டு வருவான்
பொன்னேர் நெய்யோடு பாலமுதுண்டு
ஒரு புள்ளுவன் பொய்யே தவமும்
மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள்
கொங்கை துஞ்சவாய் வைத்தபிரானே
அன்னே உன்னை அறிந்து கொண்டேன்
உனக்கஞ்சுவன் அம்மந்தரவே

என்று இசைத்துப் பாடும் பாடல்களிலேதான் பெரியாழ்வாருக்குக் கண்ணனிடத்திலே எவ் வளவு ஈடுபாடு என்பதைக் காணலாம்.

இனி கண்ணன் பெண்கள் களவு கொண்டதைப் பார்ப்போம்:

பாவம்! அந்த வீட்டுத் தாய் அவ்வளவு வருத்தப்படுகிறாள். என் மகளுக்கு ஒரு நோயும் இல்லை. காட்டுப் பூக்களையெல்லாம் தன் முடியிலே சூடிக் கன்றுகளின் பின்னே வரும் கண்ணன்தானே என் மகளை நோய் செய்தான் என்கிறாள். என் பெண் அக் கண்ணனிடம் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டாளே! அவள் இன்று வீட்டில் இல்லை. எங்கு போயிருப்பாள் என்று புலம்புகிறாள் அந்தத் தாய்! அப்பொழுது வேணுகானம் கேட்கிறது. அந்தப் புல்லாங்குழலின் இசை எல்லோரையும் ஈர்க்கின்றது. ஆம்! காட்டிலே பல இடங்களிலே மேய்ந்து கொண்டிருக்கும் பசுக்கூட்டங்களை மாலை வேளையில் வீட்டுக்கு ஓட்டி வருவதற்காகத்தான் கண்ணன் குழலூது கிறான். ஆனால் மயில் போன்ற சாயலையும், மான் போன்ற கண்களையுமுடைய ஆயர்பாடிப் பெண்களெல்லாம் தங்களைமறந்து அந்த இசை வெள்ளத்திலே மூழ்கிப்போய் விட்டார்கள்.

வீட்டுப் பெரியவர்களாலே அந்தப் பெண் களைக் காப்பாற்றுவதே கஷ்டமாகி விடுகிறது. அவன் நெருங்கி விட்டான். குழல்களும் கீதமுமாகி எங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டம். ஆம், கருநிறம் படைத்த ஆயர்கள் கண்ணனோடு வருவது மேகக்கூட்டமே தரை மேல் நடந்து வருவது போலிருக்கிறதாம். அப்படிக் குழலோசையாலும், தன் பேரழகாலும் யாவரையும் வசீகரிக்கவல்ல கண்ணனைக் காணப் பெண்கள் வீட்டு வாசலிலே கூடி விட்டார்கள் சன்னல்களிலே தாமரைப் பூத்தாப் போலே வைத்த கண் வாங்காமல் பார்க்கிறார் கள். உள்ளத்தைக் கண்ணனூடே விட்டு உணவையும் மறந்து நிற்கும் நிலையைத்தான் ஆழ்வார் எவ்வளவு அழகாகச் சித்தரித் துள்ளார்.

தழைகளும் தொங்கலும் ததும்பியெங்கும்
தண்ணுமையெக்கம் மத்தள் தாழ்பீலி
குழல்களும் கீதமுமாகியெங்கும்
கோவிந்தன் வருகின்ற கூட்டம் கண்டு
மழைகொலோ வருகின்றதென்று சொல்லி
மங்கைமார் சாலக வாசல் பற்றி
நுழைவனர் நிற்பனராகி யெங்கும்
உள்ளம் விட்டுண் மறந்தொழிந்தனரே.

ஆம்! இப்படி வருகின்ற கண்ணனை ஒரு ஆயர்பாடிப் பெண் வீட்டு வாசலிலே பார்த் தாள்-உற்றுப்பார்த்தாள். ஏக்கத்தோடு பார்த்தாள்-பார்த்தால் தான் என்ன? அதனால் இவ்வூரார் என் பெண்ணையும் இவனையும் இணைத்துப் பேசுகின்றார்களே! இது நியாயமா என்று கேட்கிறாள் ஒருதாய்.

கண்ணன் கோலம் அப்படிப்பட்டது! அவன் சுரிகை என்னும் உடைவாளை அணிந்து கொண்டிருக்கிறான். இடையர் குலத்துக்குப் பொருத்தமான தெறிவில்லாகிய சுண்டு வில்லையும் பூச்சூடிய பெரிய நீண்ட கோலாகிய தடியையும் ஊன்றி வருகிறான். அவன் மேலாடையை வேறொரு நண்பன் பின்னே எடுத்துவர, உயிர்த் தோழனுடைய தோளின்மேலே ஒரு கையை யூன்றி வருகின்றான். ஒதுங்கியும், பின்தங்கியும் இருக்கும் பசுக்களைக் கூவியழைக்க மற்றொருகையிலே சங்கத்தையும் வைத்திருக்கிறான். களைப்போடு வருகிறான். ஆனால் அவ்வாட்டத்திலும் அவன் திருமேனி அழகு குறையவில்லை.

அந்த அழகிலே மயங்கினாள் அவள். அருகே நின்றாள். ஒருவிதமாகப் பார்த்தாள். உள்ளத்தைப் பறிகொடுத்து ஏக்கத்தோடு பார்த்தாள். குறிப்பாக நோக்கினாள். அதைக் கண்டு இவ்வூரார் ஏன் என் பெண்ணுக்கும் இவனுக்கும் ஏதோ என்று பேசுகின்றார்களே என்று தாய் வருந்துகிறாள். இப்படித் தாய்ப் பாசுரமாக ஆழ்வார் இசைத்த பாடலிலேதான் கண்ணனுடைய இடைக்கோலமும், அவன்பால் உள்ளத்தையிழந்த பெண்ணின் மனக்கோல காட்டப்பட்டுள்ளது. இனி பாட்டைப் பார்ப்போம்.

சுரிகையும் தெறிவில்லும் செண்டுகோலும்
மேலாடையும் தோழன்மார் கொண்டோட
ஒருகையாலொருவன் தன்தோளை யூன்றி
ஆநிரையினம் மீளக்குறித்த சங்கம்
வாருகையில் வாடியபிள்ளை கண்ணன்
மஞ்சளும் மேனியும் வடிவும் கண்டாள்
அருகே நின்றாள் என்பெண் நோக்கிக்
[கண்டாள்
அதுகண்டு இவ்வூரொன்று புணர்க்
[கின்றதே.

இப்படியே இவன் குழலூதிவரும்போது மெய்மறந்து தங்களையிழந்த நிலையில் பெண்கள் மாத்திரமல்ல, பசுக்களும், மான்களும் மயில்களும் பட்டபாட்டையும், தேவரும் மூவருங்கூட மயங்கியதையும் இனி காண்போம்.

(தொடரும்)

# தோத்திரப்பாவிளக்கம்

## இருபசை அழிய

அக்னிஹோத்ரம் ராமாநுஜாசாரியர்

ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற,
நன்றெழில் நாரணன் நான்முகன் அரனென்று மிலரை,
ஒன்றலும் மனத்து வைத் துள்ளிநும் மிருவசை யறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நானே.
(நம்மாழ்வார் 1-3-7)

நாரணன் நான்முகன் அரன் என்னும் இவரில் ஒருவரை மனதில் வைத்து, இருபசை அறுத்து அவன் பக்கல் நம்முடைய நாளை நன்றென நலம் செய்யச் சொல்லுகிறார். இந்தப் பாட்டு நம்மாழ்வாரின் பரந்த நோக்க முள்ள தெய்வக் கருத்தை வெளியிடுவது.

எம்பெருமான் விஷயமான உணர்வைக் கொண்டு தாம் உணர்ந்து உலக வாழ்க்கையில் உள்ள பற்றை விட வேண்டும் என்று கூறுபவர், எம்பெருமானை நமக்கு உணர்த்து கிறார். நாம் எவ்வளவு சாமர்த்தியத்தோடு உணர்ந்து உணர்ந்து, உணரிலும் இறைநிலை உணர்வது அரிதென்று கூறி விட்டார். ஆனாலும் அரி, அயன், அரன் என்னும் இம் மூவர்கள் புராணங்களில் சிறப்பாகச் சொல்லப் பட்டிருப்பதால் அவர்களை உணர்ந்து, உணர்ந்து உரைத்து உன் மனதில் பட்டது ஒன்றை இறைஞ்சுமின் என்று கூறினார். அதைத் தொடர்ந்து இப்பாட்டில் மூவரில் ஒருவரை மனதில் வைத்து, உள்ளி இருபசை அறுத்துக் கொள்ளச் சொல்லுகிறார். அவனிடத்தில் மனதைச் செலுத்தி வாழ்நாள் முழுவதையும் நல்லதாக நலம் செய்யச் சொல்லுகிறார்.

இந்து மதத்தில் காணப்படும் கடவுள் கருத்து வேதத்தை அடிப்படையாகக் கொண்டு தனிச் சிறப்போடு திகழ்கிறது. ஒருவனே தெய்வம் என்ற அடிப்படையாலேயே வேதங் களுடைய கருத்தும் இதிகாச புராணங்களின் கருத்தும் நின்று வருகிறது. ஆனால் ஒருவனே வழிபடுவோரின் மனதைக் கவர பல உருவில் பலப் பெயர்களில் இருந்து வருகிறான். உருவம், பெயர் இவைகளில் உள்ள மாறுதல்களுக்குக் கருத்தளவில்தான் பேதமுண்டு. எந்தப் பெயரைக் கொண்டு வழிபட்டாலும், எந்த உருவில் வழிபட்டாலும், அது முடிவாக ஒருவனை கடவுளையே அடை யும். இது ஒரு தனியான வேற்றுமையில் காணப்படும். ஒற்றுமைக் கொள்கை; வேற் றுமை. வழிபடுவோரின் கருத்துக்கு இடம் கொடுத்து ஏற்பட்டது. உண்மையில் ஒற்றுமை தான் அடிப்படையானது. பல தெய்வங்களை இந்துக்கள் வழிபடுகிறார்கள் என்பது பொரு ளற்ற பேச்சு. எவ்வளவு பெயர்களில் எவ்வளவு உருவுகளில் தெய்வங்கள் வணங்கப் பட்டாலும் அவை ஒரே கடவுள் தத்துவத் திலேயே முடிவடைகின்றன. தனித்த உருவம், பெயர் இவை இல்லாததால் பல உருவங்களுக் கும், பல பெயர்களுக்கும் இடம் ஏற்படுகிறது. வேதங்களிலும் உபநிஷத்துகளிலும் வேற் றுமையில் ஒற்றுமை மிக அழகாக விளக்கப் பட்டுள்ளது. இதிகாச புராணங்கள் வேதக் கொள்கைகளைத் தங்களுக்கென உரித்தான வழியில் பிரித்துப் பேசுகின்றன. கடவுள் இலக்கணத்தை விளக்க வந்தவர்கள் படைப் பது, காப்பது, அழிப்பது என்ற முத்தொழில் களையும் ஒரே கடவுளுக்குச் சொன்னார்கள். ஆனால் இதிகாச புராணங்கள் மூன்று தொழி லுக்கும் தனித்தனியான கடவுள் தத்துவத்தை வைத்து மும்மூர்த்தி என்ற கொள்கைக்கு வழி கோலிவிட்டன. இது மக்கள் தெய்வக் கருத்தை நன்றாக உணர வேணுமென்ற நோக்கத்தோடு ஆக்கப்பட்டது. ஒருவனே ஆக்கி, படைத்து, அவரே அழிக்கிறார் என்று சொல்வது மக்களின் அறிவிற்குத் திருப்தியைக் கொடுக்கவில்லை.

இந்தக் குறையைத் தவிர்க்க புராணங்களில் ஒரே கடவுளை மூன்று மூர்த்தி உடையவராகச் செய்து அவர் அவர்கள் தங்கள், தங்களுக்கென வகுத்த காரியங்களைச் செய்து வருகிறார்கள் என்று கூறின. மும்மூர்த்திகளுள் பிர்மா சிருஷ்டியை மட்டும் செய்யலாம். காக்கும் அழிக்கும் அதிகாரம் அவனுக்குக் கிடையாது. விஷ்ணுவும் பாதுகாக்கலாம். படைக்கும் அதிகாரமும், அழிக்கும் அதிகாரமும் அவனுக்குக் கிடையாது. அவ்விதமே அரன் அழிக்க ஏற்பட்டுள்ள மூர்த்தி. அவனுக்குப் படைக்கும் அதிகாரமும், பாதுகாக்கும் அதிகாரமும் கிடையாது. இந்தக் கருத்திலேயே எல்லாப் புராணங்களும் பேசுகின்றன. கடவுள் கொள்கை மூன்றிலும் பிணைந்திருப்பதால் அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வு கிடையாது. மும்மூர்த்திகளிடமும் கடவுள் தத்துவம் இருந்து வருவதால் யாராவது ஒருவரை வழிபட்டு முக்தியை அடையலாம். இந்தக் கருத்து புராணங்களில் காணப்படுவது. இங்கும் வேற்றுமையில் ஒற்றுமையைப் பார்க்கிறோம். பொதுவான கடவுள் கருத்தை அடிப்படையாகக் கொண்டு அது விஷ்ணுதான் என்று வைணவர்கள் கூறுகிறார்கள். சிவபெருமான்தான் என்று சைவர்கள் கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் இந்த மும்மூர்த்திக் கொள்கையை ஆக்ஷேபிப்பதே கிடையாது. வழிபட நினைப்பவர்கள், தனிச் சிறப்போடு உள்ள ஒரு கடவுள் கொள்கையை வேண்டி நிற்பதால் அவர்கள் பிர்மா, விஷ்ணு, சிவன் என்ற மூன்று தெய்வங்களில் யாரையாவது ஒருவரை உபாசிக்கலாம். யாரை வழிபட்டாலும் அது கடவுள் வழிபாடாக ஆகிவிடுவதால் அவர்களுக்கு முக்தி உண்டு. கடவுள் தத்துவம் மூன்றிலும் பரந்து நிற்பதால் மூன்றில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது வழிபடுவோரின் இஷ்டத்துக்கு விடப்பட்டு விட்டது. நம்மாழ்வார் தம் பாட்டுக்களில் பல இடங்களிலும் மும்மூர்த்திகளையே குறிப்பிடுகிறார். அவர்களை வழிபடுகிறார். கடைசிப் பாட்டில் அரியை அயனை, அரனை அலற்றி என்று தாம் மூவரையுமே வழிபட்டதாகச் சொல்லுகிறார். அதனாலேயே அவாவற்று வீடு பெற்றதாகவும கூறுகிறார். சிலருக்கு மும்மூர்த்திகளிடமும் கடவுள் தத்துவம் நிறைந்திருப்பதை உணர்ந்து வழிபட முடியவில்லை. அவர்களுக்கு இந்தப் பாட்டில் வழி வகுக்கிறார். மூவரில் ஒருவரை மனதில் வைக்கச் சொல்லுகிறார். மனதில் வைப்பது மட்டும் போதவில்லை. நன்றாக ஆராய்ந்து வழிபடச் சொல்லுகிறார். ஆராய்ச்சி என்பது அவர் அவர்களுடைய மனதில் தோன்றும் எண்ணங்களுக்கு இடம் கொடுத்து முடிவைக் கண்டு பிடிப்பதே. மூன்று பேரிடமும் தெய்வத் தன்மை இருப்பதை ஆராய்ந்து உனக்கென்று ஒன்றை மனதில் பட்டதை வழிபடச் சொல்லுகிறார். மனிதன் முக்தியை அடைவதற்கு இடையூறாக நிற்பது இருபசை. இவை சுகம், துக்கம் என்று கூறப்படுகின்றன. இயற்கையில் வாழுங்காலத்தில் இவ்விரு பசைகள் உலகத்தோடு ஒட்டச் செய்கிறது- உலக வாழ்க்கையை விட்டால்தான் கடவுளை அடைய முடியும். அறிவு அவனை அடைய சாதனம். மூவுருவத்தில் உள்ள கடவுளை எல்லோரும் முழுவதும் அறிய வேண்டியது அவசியம். அது இல்லாமல் போனால் யாராவது ஒருவரை முக்கியமாகக் கொண்டும் வழிபட்டு இரு பசைகளை அறுத்துக் கொள்ளலாம். கீதையிலும் மற்ற இடங்களிலும் பிரியம், அப்பிரியம் இரண்டும் துவந்தம் என்று கூறப்படுகிறது. இருபசையை அறுத்தவன்தான் கடவுளை அடையத் தகுதி உள்ளவன். நம்முடைய நாட்கள் கடவுளை உணர்ந்து வழிபட ஏற்பட்டவை மனிதப் பிறப்பிற்கு அதுவே சிறந்த பயன். இது இல்லாமல் போனால் பிறப்பே பயனற்றதாகி விடுகிறது. வாழ்நாள் நல்லதாக இருக்க வேண்டுமானால் கடவுளை உணர்ந்து வழிபட வேணும். அப்பொழுதுதான் நாம் வாழ்நாளை நலமுள்ளதாகச் செய்தது ஆகும்.

நாமும் வாழ்நாளை நலமுள்ளதாகச் செய்ய மும்மூர்த்திகளில் ஒருவரை மனதில் வைத்து இருபசை அறுத்துக் கொள்வோம்.

———

" சமுதாயம் வாழ்ந்தால் சமயம் வளரும்! "

# எழுத்துப்பட்டி மன்றம்



## திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா? இல்லையா?

### "வழிபடும் உரிமை இல்லை"

கழுகுமலை வை. பூ. சோமசுந்தரம்

திரு. கார்மேகம் அவர்கள் கருத்துகட்கு மறுப்புரையாகப், புரட்டாசித் திங்களில் வெளி வந்த என், "கருவறைக்குள் சென்று வழிபடும் உரிமை வேண்டாம்" என்பதற்கான ஐந்து விளக்கங்களை, திரு. சிவ. அம்பலவாணன் அவர்கள் மறுத்துரைத்த காரணங்களுக்கு என் பதில் வருமாறு:—

(1) சாதி வேற்றுமைகள், ஏற்றத்தாழ்வுகள் அகல வேண்டுவதில் இரு கருத்துக்கள் கிடையாது. அதற்காகச் சமயம் செய்ய வேண்டிய பணிகள் உண்டு. அர்ச்சராக முறையாகப் பயின்ற எவரும் வரலாம் என்பதே இம்முயற்சியில் தலையாயது. கிறித்துவ சமயத்திலும் எவ்வினத்தாரும் சமயப்பணி செய்ய அனுமதிக்கப்படுவது காண்க. ஆனல், சாதி வேறுபாடுகளை நீக்குவதற்காகக் கருவறைப் புகல் ஒரு கருவியாகப் பயன்படுத்தப்படல் வேண்டாம்-தேவையில்லை.

(2) நம் சமயம் இத்தடையால் அழியும் என்ற கார்மேகனரை மறுத்து பிறசமயத்தாராலும் அழிக்க முடியாத நம் சமயம் இதனல் அழியாது என்ற என் கருத்திற்கு-உட்பூசல், பகை, சீற்றத்தால் அழியும் என்கிறர். திரு. சிவ. அம்பலவாணர் அவர்கள். கோயில்களில் பலப்பல குறைபாடுகள்-நடைமுறைச் சீர்கோடு இருக்கலாம். அவை ஒழிக்கப்பட வேண்டியனவே. 'கருவறை வழிபாடு' மறுப்பு சொல்லவும் முடியாது.

(3) கண்ணப்பர் வழிபட்டாரே என்று வாதிட்டமையால், அக்கால நிகழ்ச்சியில் நந்தனர் கோயில் புகுவதும் தடைசெய்யப் பட்டதைச் சுட்ட நேர்ந்ததே ஒழிய, அதில் மகிழ்ச்சி இல்லை. முன்பு இருந்தாலும்-வட மாநிலங்களில் இருந்தாலும்-இங்கு வேண்டாம் என்பதே நம் கருத்து.

(4) அப்பர் சுவாமிகளின் கருத்துக்களே நமக்கு மறை. அப்பர் சுவாமிகள் பூவும் நீரும் இட்டு வழிபடச் சொன்னதின் பொதுவான கருத்தையே கொள்ள வேண்டும். அதை 'கருவறை வழிபாடு' என்று ஏன் கொள்ள வேண்டும்? மேலும் கால வேறுபாட்டையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

இறுதியாகவும், அடிப்படையாகவும் நான் வலியுறுத்திக் கூறும் காரணம், இடவசதித் தூய்மை குறைய வாய்ப்பு-என்பன. தமிழகக் கோயில்கள்-எடுத்துக்காட்டாக திருச்செந்தூர் சங்கரன் கோயில்-கழுகுமலைக் கோயில்களில்-இறைவர் கருவறை மிகச் சிறியன. உள்ளே சென்று பலரும் வழிபட்டுத் திரும்பிவர வழியும்-இடவசதியும்-உறுதியாக இல்லை. மேலும் ஏராளமானவர்கள் அவ்விடத்திற்குச் சென்று தொட்டு வணங்கினல், அந்த இடத்தில் தூய்மை (Not sancting but cleanliness) கெடும். ஆகவே, 'கருவறை வழிபாட்டுரிமை' யார்க்கும் தேவையற்றது-வேண்டாதது.

தொண்டு செய்வோர்-கண்காணிப்பாளர்கட்குத் தடை இருந்தால் தடை நீக்கப்பட வேண்டும்.

## திரு. பா. சுந்தர்

திரு. சிவ. அம்பலவாணன் அவர்களின் மறுப்பும் அடியேனுடைய விளக்கமும்

(1) "பிறப்பின் அடிப்படையில் தொழில் என்பதை மாற்றுக்கொள்கிற காலம் இது" என்று அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

எல்லா உயிர்களும் பிறப்பிலே ஒரு தன்மை உடையனவே. ஆனல் அவைகள் செய்கின்ற தொழிலுக்கு ஏற்ப மாறுபடுகின்றன. அந்தணர்கள் வேதத்தை அத்யயனும் செய்து நியம நிட்டைகளை அனுசரிப்பதனல் அவர்கள் இறைவனைத் தீண்டி வழிபட தகுதி உள்ளவர்கள். மற்றவர்களுக்கு வேத அத்யயனும் கிடையாது. எனவே அவர்கள் பூசை செய்ய உரிமை அற்றவர்கள். காலப்போக்கிற்கேற்ப நம் சமயத்தை நம் முன்னேர்கள் மாற்றியிருப்பார்களேயானல் இன்று இந்தச் சைவ மதம் வேறு நிலையிலிருந்திருக்கும்.

(2) மாமன் மகளை மட்டுமே மணக்க வேண்டுமென்ற சட்டம் இல்லை என்பது வாதம்.

மணக்கத் தேவையான எல்லாத் தகுதிகளும் உடைய மாமன் மகள் இருக்கும்போது ஏன் வேறு ஒரு பெண்ணைத் தேடிச் செல்ல வேண்டும்.

(3) கண்ணப்பரைப் போல ஆக இயலாதவர்கள் இறைவனைப் பூவிட்டு வழிபட உரிமை பெற்றுள்ளபோது மற்றவர்களும் பெறுவதில் என்ன பிழை? என்பது வாதம்.

அவர்கள் அடையாவிட்டாலும் நாம் அடைய முயல வேண்டுமே அன்றி இது போன்ற கேள்விகள் கேட்பது முறையாகாது. கண்ணப்பர் வேத சாஸ்திரங்களை அறியாதவர். அறிந்திருந்தால் அவர் அவ்வழிபாட்டைச் செய்து இருக்க மாட்டார்.

(4) அந்தணர் வழிபட்டனர் என்பதற்கும் அந்தணர் மட்டுமே வழிபட்டனர் என்பதற்கும் வித்தியாசம் உண்டு என்பது விவாதம்.

அந்தணர் மட்டுமேதான் வழிபட்டனர். வேறு யாரும் வழிபட்டதாகச் சான்றுகள் இல்லை. மற்றவர்களுக்கும் உண்டு என்பதற்குத் தாங்கள் ஆதாரம் காட்டவில்லை.

(5) சட்டசபைக்கு இவர் இவரைத்தான் பிறப்பின் அடிப்படையில்-சாதி அடிப்படையில் மட்டுமே தேர்ந்தெடுக்க வேண்டும் என்று விதி உள்ளதா? இது கேள்வி.

சட்டசபைக்குப் போவதற்கும் தகுதி (சட்ட பூர்வமான தகுதி) வேண்டும். அந்தணர்களிலும் வேதத்தை அறியாதவர்கள் பூசை செய்ய அனுமதிக்கப்படுவதில்லை. அந்தணர் சட்டமன்ற உறுப்பினர்; தகுதி–வேதம்.

(6) சமயத்தின் ஆதிநோக்கம்–இந்தச் சாதி நீக்கம் என்பது கேள்வி.

சமயத்தின் ஆதிநோக்கம் சாதி நீக்கம் என்ருல் அதற்கு அரசாங்கம் ஏன்? இறைவனுடைய திருவடியை அடைய வேண்டியதுதான் சமயத்தின் நோக்கம். அதற்காகக் கருவறையிலுள்ள பிரானை பூஜிக்க வேண்டிய அவசியமில்லை. சிவதீட்சைப் பெற்று வீடுகளில் செய்யலாம்.

(7) நடராசப் பெருமான் நந்தனரை உள்ளே அழைத்தான். சமூகத்தின் பழக்கம் தடுத்தாலும் இறைவனின் இதயம் அவரை விரும்பியது அல்லவா? என்பது விவாதம்.

நடராசப் பெருமான் நந்தனரை ஏரியில் மூழ்கி அந்தண வடிவு பெற்ற பிறகுதான் அழைத்தானே ஒழிய ஏரியில் மூழ்காமுன் அழைக்கவில்லை. நந்தனரைப் போன்ற பக்தர்கள் இறைவனுடைய கட்டளைப்படி ஏரியில் மூழ்கி அந்தவடிவு பெற்று வேண்டுமானல் பூசை செய்யட்டும்.

(8) காசியில் மற்றவர்கள் தீண்டி வழிபடுவதால் ஏற்படும் மாசைப் போக்குவதற்காகத்தான் அந்தணர் வழிபடுகிருர். நாம் செய்வது மாசு உள்ள வழிபாடு என்று தெரிந்தும் அதை நாம் செய்ய விரும்புவது முறைதானு?



௳

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 13 (தொடர்ச்சி)

புனித : இறைவனின் திருவடி நிழலில் உட்கார வேண்டியவர்கள் இந்த மரத்தடி நிழலில் உட்காருகிறோம். எல்லாம் அவன் செயல். சிவ...சிவ....நந்தி! சிவப்பழம்!

நந்தி : அம்மா...

சிவ : அம்மா! சொல்லுங்க அம்மா!

புனித : அப்பா...அம்மாவுக்குப் பசி வந்திருக்கும். இந்த நிழலிலேயே இருந்து உணவருந்தி விட்டுச் செல்வோம்.

நந்தி : மிக மிக நல்லது. கட்டிச் சோற்று மூட்டையை அவிழ்க்கலாம் என்கிறீர்கள்

புனித : ஆமாம்....உனக்கும் பசி வந்திருக்குமே? இல்லையா நந்தி?

நந்தி : ஆமாம் அம்மா

புனித : சிவப்பழம்! பக்கத்திலே நீர்நிலை இருக்கிறதா என்று பாருங்களே. பார்த்துத் தண்ணீர் கொண்டு வாருங்கள்.

சிவ : சரிங்க அம்மா...

தன : அம்மா புனிதவதி! நாங்களெல்லாம் உன்னைப் பற்றிக் கவலைப்படுகிறோம். நீயோ எங்களைப் பற்றிக் கவலைப்படுகிறாய்.

புனித : அப்பா! யார் யாருக்காகக் கவலைப்படுவது? நம் எல்லோருக்குமாகக் கவலைப் பட வேண்டியவன் எம்பெருமான். என்னைப் பெற்ற தாய் தந்தையராக நீங்கள் கவலைப்படுகிறீர்கள். நம் எல்லோரையும், உலகத்து உயிர்கள் எல்லாவற்றையும் பெற்றுக் காத்துப் பாவம் களைந்து புண்ணியம் சேர்ப்ப வனாகிய இறைவனன்றோ கவலைப்பட வேண்டும்! நமக்கு இந்நிலை கிடைத்ததும் அவன் அருள்நிலையே. உயிர்களிடத்துப் பரிவு காட்டில் செம்பில் களிம்பு போல் ஒட்டியிருக்கும் மலத்தைச் சார்ந்த உயிர்களின் இருவினையையும் போக்கும் அலுவலைத்தான் என்னப்பன், ஐயன் செய்கின்றான். அவ்வலுவலை முடித்துத் தன்னருள் வெளிக்குள் நம்மை யெல்லாம் ஒருநாள் சேர்த்துக் கொள்வான்.

சிவகாமி : என்ன மோ'டி அம்மா! அவனை நம்பித்தான் நாங்கள் முயற்சி செய்கிறோம். அவன் அருளாலே முதலிலே மருமகப் பிள்ளை உன்னைச் சேர்த்துக் கொள்ளட்டும்.

புனித : சரி, சாப்பிட வாருங்கள். சிவப்பழமும் நந்தியும் தண்ணீர் கொண்டு வந்துட்டாங்க.

## காட்சி 14

இடம் : மதுரையில் ஓர் இல்லம்

நேரம் : காலை

உறுப்பினர் : பரமதத்தன், தனதத்தன், புனிதவதி முதலியோர்.

பரம : (வேகமாக வந்து) வரவேண்டும் வரவேண்டும். (புனிதவதியின் காலில் வீழ்ந்து வணங்குகிறான்; புனிதவதி அஞ்சி ஒதுங்கிக் கொள்கிறாள்; தன் மற்றோர் மனைவியையும் பெண்ணையும் பார்த்து) உம்...மனைவி மக்களே! நீங்களும் வீழ்ந்து வணங்குங்கள். தெய்வமே எதிர்கொண்டு வரும்போது வணங்குதலே மேலானது. வணங்குங்கள் ஏன்? எல்லாரும் வாளா நிற்கிறீர்கள். நீங்களும் வீழ்ந்து வணங்குங்கள்!

புனித : அன்பரே! இஃதென்ன?

தன : மருகரே! நாங்கள் வியக்கும்படியாக...

சிவகாமி : உலகமே வியக்கும்படி இருக்கிறது. மருமகன் அப்படி நடந்துக்கிருர்! மனைவியைக் கண்டு விழுந்து கும்பிடுற ஆண் பிள்ளையாக இருக்கிருரே. இந்தப் பெண்ணும் குழந்தையும் யாரு?

சிவ : முதலாளி! என்ன செய்தீர்கள்!

நந்தி : சும்மா விழுந்து கும்பிட்டாரு!

பரம : சிவ... சிவ... ஏன் நிற்கிறீர்கள்? உம்....விழுந்து வணங்குங்கள். சிவனடியாரே முன்னிற்கும் போது வணங்காமல் இருக்கலாமா?

புனித : அன்ப! தங்களைக் கண்டதும் எனக்கும் புளகாங்கிதம் உண்டாகிறது.

தன : பல ஆண்டுகள் ஆகிவிட்டனவே. தங்களைக் கண்டதும் எங்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி, தெரியுமா!

பரம : பல ஆண்டுகள் ஆனதால்தான் உடனே வணங்கினேன். இன்னும் வணங்குகிறேன். (வணங்கப்போகும்போது புனிதவதி ஒதுங்கி ஒடுங்குகிருள்)

தன : மருகரே! நீங்கள் இருப்புதை அறிந்ததும் புனிதவதியை அழைத்துக் கொண்டு வந்தோம். இந்நாள் வரை தாங்கள் எங்குள்ளீர்கள் என்பது தெரியாமலேயே இருந்தது. இங்கு வந்ததும் உங்கள் இல்லம் எங்கிருக்கிறது என்பதைக் கேட்டறிந்து ஆள் அனுப்பினோம்.

பரம : நீங்கள் அனுப்பியதே மேலானது. இல்லையேல் ஒரு அடியாரைச் சந்திக்கும் பேறு கிடைத்திருக்குமா? இந்த நந்தி வந்து சொன்னதும் ஓடோடி வந்தோமே!

நந்தி : ஆமாமா...மனைவியைப் பார்க்க அப்படி ஓடோடி வந்தார். வந்ததும் காலில் விழுகிருர். ஆமா...வரும்போது இவர்களையும் அழைத்துக் கொண்டு வந்தீர்களே, இவர்களெல்லாம் யாரு?

பரம : இவள் என் மனைவி. இவள் என் மகள். வயது மூன்ருகிறது.

தன: சிவகாமி: } ஆ....மனைவியா, மகளா!

நந்தி : இரண்டாவது மனைவியா?

தன : என் மகளை மறந்தீர்களா மருகரே!

சிவகாமி : அப்படி என்ன என் மகள் உங்களுக்கு ஆகாமே போய்ட்டா? (முந்தானையால் முகத்தைத் துடைத்துக் கொள்கிருள்).

பரம : யாரும் என் மேல் தப்புக் கணக்குப் போட வேண்டாம். உங்கள் மகள் என் மனைவியா இருக்க நான் தகுதியற்றவன்.

தன : என்ன?

சிவ : ஆ...

பரம : ஆம்

புனித : அன்பரே!

பரம : இவ்வம்மையார் தலைசிறந்த சிவனடியார்களுள் ஒருத்தி! தலைமேல் வைத்துப் புகழத் தக்கவர். யாவராலும் வணங்கத்தக்கவர்.

தன : மருகரே! நீங்கள் சொல்வது எங்களைக் குழப்புகிறது. எது எவ்வாருயினும் புனிதவதியையும் தாங்கள் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

சிவப்பழம் : இந்த அம்மாவை விட்டிட வேண்டாம் முதலாளி!

நந்தி : இரண்டு பேரையும் வைத்துக் கொள்ளுங்கள்!

சிவகாமி : ஆமாங்க...உங்களுக்கும் புண்ணியம் உண்டாகும்.

புனித : அன்ப! உங்களுக்காகவே இன்று வரை வாழ்கிறேன். உங்கள் அடிமை யான். என்னை ஏற்று ஆதரிக்க வேண்டும்.

பரம : அம்மா! தாங்கள் சொல்வது நன்றன்று. உலகுக்கு உபதேசம் பண்ணும் ஆற்றல் தங்களுக்கு உண்டு. ஆண்டவன் அருள் பெற்றவர் தாங்கள். அரன் அடிபணியும் என் போன்ரோர் வணங்கும் மகிமை தங்கள்பால் உண்டு. மாதொரு பாகனையே மாம்பழம் தரச் சொன்ன மாது தாங்கள். யான் எப்படி பெரியாரை மனையாளாக வைத்துக் கொள்ள முடியும் ?

புனித : அன்ப! மாதொரு பாகன் அருளால் இருவருமே நல்வாழ்வு வாழலாமே.

பரம : சிவ, சிவ... பெரியாரொடு நான் இல்லற வாழ்வு வாழலாமா?

புனித : வாழ்தலால் தவறு ஒன்றுமில்லையே.

பரம : தவறு இல்லை தான். பெரியாரொருவர் எனக்கு அடித்தொண்டு செய்திடலாமா?

புனித : யானே விரும்பிச் செயின்.

பரம : என் மனம் ஒப்ப வேண்டுமே.

புனித : மனம் ஒப்ப ஏற்பீர் என வேண்டுகிறேன்.

பரம : அம்மா ! என் மனதை மாற்ற முயல வேண்டாம்.

புனித : அன்ப ! என் மனதைக் குழப்ப வேண்டாம்.

பரம : தெய்வச் சித்தம் அவ்வாறிருப்பின் யான் என்ன செய்ய?

புனித : தெய்வச் சித்தம் சேர்ந்தே வாழ விரும்பும். தாங்களே வேறு முடிவுக்கு வந்து விட்டீர்கள்.

பரம : இல்லை தெய்வம் தான் உன் உருவில் வந்துள்ளது. நான் வணங்கும் தெய்வத்தின் அருள்பெற்றவள் நீ.

புனித : நீர் வணங்கும் தெய்வமே உமையொரு பாகனாய் இருக்கிறதே.

பரம : தெய்வத்திற்கு அந்நிலையென்றால் எனக்குமா?

புனித : உங்கள் அன்பு பெற்ற அந்த அம்மையாரொடு என்னையும் ஓர் ஆளாக...

பரம : வேண்டாம் அம்மா! உலகமெல்லாம் போற்றும் உத்தமப் பெற்றுகச் சீரிய சிவச்சிந்தை மிக்க சிவனடியார்களுள் ஒருவர் என எண்ணத் தக்கவராக விளங்கப் போகும் தாங்கள் எனக்கு இல்லக் கிழத்தியாக வேண்டாம்.

புனித : இம்முடிவு இறுதியானதா, அன்பா?

பரம : ஆம் தாயே!

புனித : நீர் வணங்கும் சிவபெருமான் சாட்சியாக...

பரம : சிவபெருமான் சாட்சியாகவே உங்களை நான் வணங்குகிறேன்.

புனித : உங்களுக்காகவே நான் வாழ்ந்தேன்.

பரம : இல்லை, சைவத்தை வளர்ப்பதற்காக வாழ்கிறீர்கள்.

புனித : அன்று நீங்கள் போற்றிய இந்த அழகும் அழகுடலும் உங்கள் நன்மைக் காகவே இருக்கின்றன.

பரம : இல்லை உலகெலாம் சைவ நெறி பரப்புதற்காகவே இருக்கின்றன.

புனித : அன்பா! அம்மையப்பன் சாட்சியாக என்னை ஏற்றுக் கொள்ள முடியாதா?

பரம : அம்மையே! அம்மையப்பன் சாட்சியாக நான் வணங்கும் அடியார்களுள் ஒருவராக ஏற்றுக் கொண்டுள்ளேன்.

புனித : அம்மையே அப்பா! அம்மையே அப்பா! அன்பர்க்கருளும் அரனே! உயிர்க்குயிராய் விளங்கும் உருவே. தண்ணிழல் தரும் தருவே! என்னைப் பாராய். எந்நிலை காணாய். சிவமே! பரம்பொருளே! எவர்க்காக என்னுடலைத் தாங்கியிருந்தேனோ அவரே என்னை வெறுத்தொதுக்கும் போது நீயன்றி வேறு கதி ஏது? எம்பெருமானே! இப்பூவுடல் வேண்டேன். இவ்வழகு வேண்டேன். சிவமே...ஆம்...எனக்கு இத்தசைப் பொதி வேண்டாம். இனி நான் உன்னையே காண்பேன். உன்னருளையே பெறுவேன். இறைவா எனக்கு இவ்வுடம்பின் தசைப் பொதி போக்கி எலும்புருவமே அருள்க! இறைவா! தசை நீக்கிய எலும்புருவமே போதும். எலும்புருவமே அருள்வாய். எலும்புருவமே அருள்வாய் இறைவா! எலும்புருவமே அருள்வாய்! (சொல்லிக் கொண்டே மேடையின் ஓரத்திற்குப் போய் மறைந்து விடுகிறாள்).

பரம : ஆ...(கையெடுத்துக் கும்பிட்டு). ஆ...சிவ...சிவ.

தன : அம்மா! புனிதவதி!

சிவகாமி : மகளே.

(தொடர்ந்து ஓடுகிறார்கள்)

## காட்சி 15

இடம் : தெரு

நேரம் : பிற்பகல்

உறுப்பினர் : தனதத்தன், சிவகாமி, சிவப்பழம் முதலியோர்.

சிவகாமி : மகளே! புனிதவதி! (ஓடிவந்து)

தன : புனிதவதி! அம்மா புனிதவதி!

சிவப்பழம் : தாயே! உருவம் மாறுகிறாயே!

நந்தி : அம்மா! உடம்பு மறைகிறதே! அதோ...மறைந்தது...மறைந்தது.

தன : தசைப் பொதி நீக்கிக் கொண்டாயே அம்மா!

நந்தி : எலும்புருவமாய் ஆகி விட்டாயே அம்மா! எலும்புருவம்...பேயுருவம் பேயுருவம்.

தன : அம்மா புனிதவதி! பேயுருவமாய் ஆவதோ நீ! (தழுதழுக்கிறான்)

சிவகாமி : என்ன பொண்ணுடியம்மா! நீயா என்னென்னமோவா ஆக்கிக்கிறே! இனி எப்படியடி பார்ப்போம். (அழுகிறாள்)

புனித : (குரல்) என்னைப் பெற்றோரே! அன்பர்களே! அழுது புலம்பாதீர்கள். யானே விரும்பி ஏற்றுக்கொண்டேன் இப்பேயுருவை! இப் பேயுருவம் இறைவனை வணங்குவதற்காகவே...இப் பேயுருவே எனக்கு இனி நன்மை செய்யும். என்னையும் பொருட்டாய் மதித்து யான் விரும்பியவாறே இவ்வுருவை அளித்த எம்பெருமானை-சிவபெருமானை—எல்லாரும் பணியுங்கள். சிவவேடமே மெய்ப்பொருள் என்பதனை உணர்ந்து உய்வீர்களாக. எனக்கு இனிச் சிவனை நேரில் கண்டு களிக்கும் பேறு அளிக்க வேண்டுவேன். சிவனையே பாடிக் களிப்பேன். 'அற்புதத் திருவந்தாதி' பாடுவேன். கைலாயம் செல்வேன். எலும்புருவமாய் ஆன நான் தலையாலேயே நடந்து கைலாயம் செல்வேன். கடவுளைக் காண்பேன். நீங்களெல்லாம் வருந்தாதே செல்லுங்கள். உய்யும் நெறியாம் சைவநெறி மேற்கொண்டொழுகுங்கள்.

சிவப்பழம் : ஆம்...உய்யும்நெறி சைவ நெறியே. சிவ....சிவ...

எல்லாரும் : சிவ...சிவ...சம்போ மகாதேவா!

## காட்சி 16

இடம் : கயிலாய மலைக் காட்சி

நேரம் : மாலை

உறுப்பினர் : சிவபெருமான், உமாதேவி.

[காட்சி தொடங்கும் போது சிவனும் உமையும் மலைமீது அமர்ந்துள்ளனர்.]

பெண்குரல் : நமச்சிவாய வாழ்க ! நாதன் தாள் வாழ்க !

உமை : நாதா! உலக நாதா! உம் விளையாடலே விளையாடல்! உலகத்தினை எவ்வாறெல்லாமோ விளையாடச் செய்கிறீர்! ஆட்டுவிக்கிறீர்!

சிவன் : உமையே! எதற்காகவோ இத்தனைப் புகழ் மொழிகள்?

உமை : நாதா! தெரியாதது போல் பேச வேண்டாம். அதோ கீழே பாருங்கள்.

சிவன் : பார்க்கிறேன்.

(இருவரும் கீழ்-இடப்பக்கமாகக் கீழ்பார்த்தல்)

உமை : ஓர் எலும்புருவம்-பேயுருவம்-வருகிறதே. அதுவும் தலையாலே நடந்து வருகிறதே! என்னே புதுமை! உம் திருவிளையாடலே திருவிளையாடல். என்ன நோக்கமோ நாதா!

சிவன் : உமாதேவி! அந்த எலும்புருவம் புனிதவதி என்பாள். தலையால் நடந்து வரும் இவள் நம்மைப் பேணும் அம்மை காண். நம்மை 'அற்புதத் திருவந்தாதி'யால் புகழ்கிறவள். காரைக்காலில் தனதத்தன் என்பானின் மகள்.

உமை : அப்படியா! காரைக்காலம்மையார் என்றழைக்கலாமே.

சிவன் : அது உன் அருளாகட்டும். காரைக்காலம்மையாராய் வரும் இவள் மிகப் பெருமை வாய்ந்த இந்த வடிவத்தை எம்மை வேண்டிப் பெற்றுக் கொண்டாள். போற்றுதற்குரியவள்.

உமை : அதோ... அருகிலேயே வருகிறாள்.

சிவன் : நம் சன்னிதிக்கு வருகிறாள்.

புனிதவதி குரல் : சிவமே ! சிவபெருமானே! அப்பா! அப்பா! ஐயனே! அப்பா! என்னப்பா! அம்மையே அப்பா!

சிவன் : அம்மையே! அம்மையே! வாழி! அருள் பெறுக. காரைக்காலம்மையே! உனக்கு வேண்டுவது யாதோ?

புனிதவதி குரல் : அம்மையே அப்பா! உம்மை நேரே கண்டு கும்பிடப் பெற்றேன். பேறே பேறு. ஐயனே! உயிர்களை எல்லாம் ஆட்டுவிக்க நீ ஆடுகின்றாயே...... அவ்வாட்டத்தைக் கண்டு கண்குளிர வேண்டும்.

சிவன் : அம்மையே! நீ விரும்பியபடியே அருள்வோம். நம் பரத கண்டத்தின் தென் திசையில் விளங்குகின்ற பழையனூர் ஆலங்காடு என்னும் திருத்தலத்தில் நீ விரும்பியவாறு நமது திருநடக் காட்சியைக் கண்டு களிக்கலாம். அம்மையே உம் பேரானந்தப் பரவசத்தால் தீந்தமிழால் நம்மைப் பாடுவாயாக.

புனிதவதி குரல் : (பாடுதல்)

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றேன்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
அறவா நீ ஆடும்போதுன் னடியின்கீழ் இருக்க வேண்டும்

அப்பனே! நின் அருளாணையைத் தலை மேற்கொண்டு ஆலங்காடு செல்வேன். செல்வேன். (இறவாத...பாடலொலி மென்மையாக)

சிவன் : போய் வா! உலகம் உய்யட்டும்...செழிக்கட்டும். (உமையைப் பார்க்க உமை சிவனோடு ஒன்றுகிறாள்).

(முற்றும்)

# "அண்ணாமலை அண்ணல்"

பெ. சுப்பிரமணியன் எம்.ஏ.

அண்ணாமலை! நினைக்க நினைக்க நெஞ்சு இனிக்கிறது. கண்பெற்ற பயனைக் காட்சிப் புலன் துய்க்கிறது. கேட்பதால் செவிகள் குளிர்கின்றன. ஐம்புலனும் ஆரத்துய்க்கின்ற இன்பமலை அண்ணாமலைதான்! அண்ணாமலையை நம் அகக்கண் கொண்டு பார்த்தால் எத்துணைப் பெரும்பயன்! அதன் நீண்ட நெடுங்கால வரலாற்றுத் தொன்மைக்குத் தான் எல்லையேது; இறைவன் எரிப்பிழம்பாய் நின்ற இடமல்லவோ! எவ்வாறு அவன் தோற்றமும் முடிவுமில்லாதவனோ அவ்வாறே அவன் மாலயன் இருவராலும் அடிமுடி தேடிக் காணப் பெருதவாறு பேருருக்கொண்டு நின்ற, அம்மலைக்கு ஆதியும் அந்தமுமில்லையன்றோ? ஐம்பூதங்களில் அழலாய் நிற்கும் தலம் நினைத்தாலே நிமலனடி சேர்க்கும் தலம். ஆம்! அண்ணாமலை நினைத்தாலே முத்தி நல்கும்; இயற்கையெழில் நிறைந்ததும் கைபுனைந்தியற்றுக் கவின்பெறு வனப்பினை யுடையதும் அண்ணாமலையின் அளப்பரும் மாட்சி. ஞானத்தின் திருவுருவாம் காழிப்பிள்ளையும் உழவாரப் படையால் உலகை உய்வித்த அப்பரடிகளும் பாடிய தெய்வத்தலம் அம்மலையுருவாய் நின்று உலகை உய்விக்கும் பெருமான் அண்ணாமலை அண்ணல். அண்ணலின் அருள் நலத்தினை நம் சமய ஞானிகள் அருளிய நெறியில் காண்போம்.

## அண்ணாமலை-பெயர்க்காரணம்:-

இதனை ஞானத்தின் விளைநிலம் என்றும் ஞானபூமி என்றும் மொழிவர். இறைவன் தூய தொண்டர்தம் உள்ளக் கமலத்தையே உவந்து இருக்கையாய்க் கொள்வான், "நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்" எனவும் "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்" எனவும் அப்பரடிகள் அருளினார். இறைவன் தொண்டரை வாழ்விப்பான். 'பிறர்க்கெல்லாம் அரியர் தொண்டர்க்கெளியர் ஐயாறரே' என்பது அப்பர் வாக்கு. கமலநான்முகனும் கார்முகில் நிறத்துக் கண்ணனும் நண்ணுதற்கரிய விமலன் வான்பழித்து இம்மண் புகுந்து தொண்டரை ஆள்கொள்வான் என்பது மணிமொழி. ஏனையோரெல்லாம் அண்ட முடியாதவனாக இருப்பவன் தொண்டர்க்கு அணித்திருந்து அண்ணிப்பானாக இருக்கின்றான். அண்ணாமலையெனில் அண்ணாதமலை, அகப்படாதமலை எனப்படும். அன்பெனும் பிடியுள் அகப்படும் அண்ணாமலையண்ணல் 'மாலறியா நான்முகனும் காணாமலையானான்'. இருதொழிலியற்றும் கடவுளர்க்கும் இந்திரன் முதலாய வானவர்க்கும் அண்ணாதவனாக இருக்கின்றான். பெருமானுடைய திருவடியையும் திருமுடியையும் பன்றியும் அன்னமுமாகச் சென்று மாலும் அயனும் தேடியும் இறைவன் எரிப்பிழம்பாய் அகப்படாதிருந்ததால் அண்ணாமலை எனப்பட்டது. சீகாழிப்பிள்ளையார்

"விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும்
வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்
புகழோனும்
அளவாவண மழலாகிய அண்ணாமலையண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்
அடிசரணே."

எனப் பாடினார்.

## அண்ணாமலையின் இயற்கைச் சிறப்பு:-

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் அண்ணாமலையின் இயற்கை வனப்பினைக் காணலாம். அண்ணாமலையில், முழவொலி போன்று ஒலியெழுப்பக்கூடிய அருவிகள் பாய்ந்தன; ஆண்குரங்குகளால் இனிய மாம்பழத்தினைப் பறித்துவிட்ட மாவின்கிளைகள், விட்ட வேகத்தில் கரிய மேகத்துடன் பட்டு, பாறையில் மழை பொலிவித்தன; அழகிய ஆண்மயில்கள் பெடையோடு உறையும் பொழிலில் கழை முத்தங்கள் நிறைய சொரியும் சாரலும் நீர்த்துளியுடைய மேகம் தவழும் பொழிலும் அண்ணாமலையில் அழகு செய்தன; மேகம் அதிரும்போது வெருவி ஆநிரைக் கூட்டத்துடன் காட்டுப்பசுக்கள் சாரலில் அணைந்தன; பன்றித் திரளுடன் இனமான்களும் கரடியும் ஆனைத்திரளும் வந்தணைந்தன; தவறிய பெண் யானையைக் காணாது சுற்றித் தேடி அழைத்து அலுத்துப்போய் உறங்கும் சாரல்; குறவர் குறத்தியர் பாடியும் ஆடியும் மகிழ்ந்தனர். வெஞ்சொல் பேசும் வேட்டுவர்தம் பெண்கள் பரண் ஏறி அஞ்சொற் கிளிகளை ஓட்டுகின்ற இனிய ஓசையுடையது அம்மலை. இக்காட்சிகளெல்லாம் காழிப்பிள்ளையார் காட்டும் இயற்கைக் காட்சிகள். அப்பரடிகள், பொன் கொழிக்கும் அருவி என்றும் பொன் சொரியும் அருவி என்றும் வண்டின்குலம் மலிந்த

அண்ணுமலேயென்றும் அரவுமிழ் மணிகொள் சோதி அணியணுமலே யென்றும் பாடினர். அருணகிரியார்,

..............“வாளே

முடுகு கயலுகள் வயல்களும் முருகவிழ்
தடமு முளரிய அகழியு மதில்களு
முழுது முடையதொரருணேயிலுறைதரு
மிளேயோனே
அகிலு மருதமு முகுளித வகுளமு
மமுத கதலியு மருணமும் வருடையு
மபரி மிதமத கரிகளும் அரிகளும்
உடனேகொண்
டருவி இழிதரு மருவரை தனிலொரு
சவர வனிதையை முனிதரு புனிதையை
அவசமுடன் மலரடி தொழுதுருகிய
பெருமாளே”.

(திருப்புகழ்-429)

இப்பாடலில் கயலுகளும் வயல்களேயும் அகழிமதில்களால் சூழ்ந்ததுமாகிய அருணே என்றும், அகில், மருதம், வகுளம், அமுதம் போன்ற வாழை, எலுமிச்சை, வருடைப்பலா முதலிய வளங்களும் யானேகளும் சிங்கங்களும் அருவிகளும் நிறைந்த வரை என்று அண்ணு மலேயின் இயற்கை வனப்பினேக் காட்டுகின்ருர்.

அண்ணுமலே அண்ணலின் அருள்நலம்:-

உண்ணுமுலேயம்மை யொடும் உடனுகிய அண்ணுமலேயண்ணல், தன்னே நீள நினேந்து நித்தலும் கைதொழுதேத்தும் அடியார்க்கு இருள்சேர் இருவினேயும் சேராதவாறு காத்து, தனதடி சேரும் பெரும்பேற்றை நல்குவான். திருஞான சம்பந்தப் பெருமான், “அண்ணுமலே தொழுவார் வினே வழுவா வண்ணமறுமே” என்றும், “புனேசேவடி நினேவார் வினேயிலரே” என்றும் பாடுகின்ருர். அப்பரடிகள், அண்ணு மலே யண்ணலே ஒன்றியிருந்து உள்ளமுருகி வழிபட்டால் மூன்று காலத்தின் வினே களிலிருந்தும் நீக்கம் பெற்று உய்வு பெறலாம் என்று பாடுகின்ருர். “அண்ணுமலே கைதொழக் கெட்டுப்போம் வினே கேடில்லே காண்மின்” என்று பாடியவர். முன்செய்த வினேகள் போகும் என்பதனே,

“ஆணிப்பொன்னன் அண்ணுமலே கைதொழப்
பேணி நின்ற பெருவினே போகுமே”
என்ருர்.

இப்பொழுதுள்ள வினேகள் ஒடிப்போம் என்பதனே,

“ஆடிப்பாடி அண்ணுமலே கைதொழ
ஓடிப்போம் நமதுள்ள வினேகளே”
என்ருர்.

இனி வருங்காலத்தில் நல்வினேயே நம்மை வந்தடையும் என்பதனே,

“அல்லல் தீர்க்கும் அண்ணுமலே
கைதொழ
நல்ல வாயின நம்மை அடையுமே”

என்றும் பாடினர். முக்கால வினே களேயும் ஆண்டு நமக்கு அருள் வழங்குபவனுக அண்ணு மலேயானே அப்பரடிகள் காட்டுகின்ருர்.

காலனேக் காலால் கடிந்த பெருமான் காலன் நம்மை அணுகாதவாறு காத்து அவனது திருவடியில் சேர்ப்பான். திருஞானசம்பந்தர், “காலன்வலி தொலேசேவடி” என்ருர். அப்பரடி கள் ‘காலகாலன்’ என்ருர். அண்ணுமலேயில் தோன்றிய அருணகிரிப் பெருமான்,

“காலன் எனேயணுகாமல் உனதிரு
காலில்வழிபட அருள்வாயே!”

என்ருர். அப்பரடிகள் அண்ணுமலே அண்ணலேப் பாடும்போது அவன் காலனேக் காலால் உதைத்தவன் என்ற குறிப்பில்,

“......காலன் ஆருயிர்
பண்டு கால்கொல் பாய்ந்த பரமனர்
அண்டத் தோங்கும் அண்ணுமலே
கைதொழ
விண்டு போகும் நம்மேலே வினேகளே”

என்று பாடியருளினர். மணிவாசகப் பெருமான்,

“தண்ணர் தமிழளிக்குந் தண்பாண்டி
நாட்டானே
..................................................
அண்ணுமலேயானேப் பாடுதுங்காண்
அம்மானுய்”.

என்று பாடினர். மேலும், ‘ஆதியும் அந்தமு மில்லா அருட்பெருஞ்சோதி’ என்றும் “அண்ணு மலேயெம் அண்ணு போற்றி” என்றும் பாடினர்.

ஞானத்திரளாய் நின்ற பெருமான்:-

அண்ணுமலே ஞானபூமி. திருமாலும் பன்றி யாய்ச் சென்றுணராத் திருவடியை உள்ளத் திருத்தி இடையருது தைவருகின்ற சிந்தைய ராகிய யோகியரும், சித்தரும் முனிவரும், வான்வந்த தேவரும் பெருமானது அருள் வேண்டி ஞானவிளக்கம் பெறுகின்ற இடம் திருவண்ணுமலே. திருஞான சம்பந்தப் பெருமான்,

“ஞானத்திரளாய் நின்ற பெருமான் நல்ல
அடியார் மேல்
ஊனத்திரளே நீக்கும்”

என்று அண்ணுமலேயண்ணலேப் பாடுகின்ருர். ஞானியரெல்லாம் அம்மலேயில் ஞானத்தவம் இயற்றியிருக்கின்றனர்; இயற்றிவருகின்றனர்.

திருவண்ணுமலையை வலம் வந்தாலே தீரா நோயும் தீரும் என்பர். அருணகிரிநாதர் அவதாரம் செய்ததும், குகை நமச்சிவாயர், குருநமச்சிவாயர் போன்ருேர் சித்தி பெற்றதும் அண்ணுமலையாம், அண்மைக் காலத்தில் இரமணர் போன்ற பெருந்துறவியர் கடுந் தவம் இயற்றிய இடம். தமிழகச் சமய உலகில் பெரும்பங்கு வகிக்கின்ற. இன்றைய குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீனத்தைத் தோற்றி அருள்பாலித்த ஆதி குருமுதல்வன் திரு வண்ணுமலையில் அண்ணுமலை அண்ணலின் திருவடியை வணங்கி ஞானுனுபவம் பெற்றே குன்றக்குடியில் திருமடம் அமைத்தார். ஞானத் திரளாய் நின்ற பெருமான் ஞானதீபமாக-ஞானப்பிழம்பாக விளங்குகின்ருன். இருளை நீக்கும் ஒளியைப்போல அடியார்தம் ஆணவ இருளை நீக்கி ஞானஒளி வழங்கும் ஞானக் கதிராக விளங்கினுன். அழல்மயமாய் நின்று உலகிற்கு ஞான விளக்கம் நல்குகின்ற அவனது சோதித்திறம் போற்றி ஆண்டு தோறும் அண்ணுமலையில் கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளில் விளக்கீடு விழா மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது. 'அண்ணு மலை தீபம்' எனத் தமிழ்நாடு முழுதும் போற்றும் தன்மையுடையது. மாலும் அயனும் கொண்ட ஆணவ இருளையே அகற்றிய பெருமானுக்கு நம்முடைய ஆணவஇருள் பெரிதல்லவே. 360 தீர்த்தங்களையுடைய அண்ணுமலையில், சிவகங்கை தீர்த்தம், பிரம தீர்த்தம், அக்கினி தீர்த்தம், இந்திர தீர்த்தம் நான்கும் சிறந்தவையாகும். விண்ணைமுட்டும் கோபுரங்களையும் பெரிய மண்டபங்களையும் உடைய அண்ணுமலையின் கோயில் சோழர் காலந்தொட்டுப் பல மன்னர்களால் விரிவு செய்து பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது. இக் கோயில் மிகச் சிறந்த கலைநுணுக்கமும் கொண்டது. மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லானுகிய பெருமானை நினைத்தாலே பேரின்பப் பேறெய்த லாம் என்பது ஆன்ருேர் முடிவு. ஆதலின் அண்ணுமலையண்ணலின் அருட்திறனை நெஞ் சத்தில் நீள நினைந்து வழிபட்டு வாழ்வோம்.

௨

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 15

இடம் : பெரியாழ்வார் வீடு
நேரம் : காலைப்போது
உறுப்பினர் : ஆண்டாள், பெரியாழ்வார்
நிகழ்ச்சி : மீண்டும் மணம் பற்றிப் பேசல்

ஆண்டாள் : நீங்கள் என்னதான் சொல்லுங்கள் அப்பா! எனக்கு மானிடன் ஒருவனும் வேண்டாம்.

பெரியாழ்வார் : என்னம்மா ஆண்டாள்! கடவுளை மணத்தல் என்பது......ஆ......நீ பாவை நோன்பு நோற்றது மனதுக்குகந்த மணாளனை வேண்டித்தானே!

ஆண்டாள் : ஆமாம்.

பெரியாழ்வார் : நான் சொல்பவனை மணந்து கொள்!

ஆண்டாள் : அப்பா! நான் மணந்து கொள்ள விரும்புகிறேன். ஆயின் மானிடன் ஒருவனை யல்லப்பா! ஆண்டவனைத்தான் அப்பா மணக்க விரும்புகிறேன். மாயவனுக் கன்றி மனிதர்க்கு வாழ்க்கைப்படேன். மாலிருஞ்சோலை மாயவனுக்கு அல்லால் மற்றொருவர்க்கென்னைப் பேசலொட்டேன். அவன் முகத்தன்றி விழியேன்.

பெரியாழ்வார் : உன் எண்ணம் பாழ். பாழடைந்த உன் எண்ணத்தைப் புதுப்பித்துக் கொள்ளம்மா!

ஆண்டாள் : நான் புதுப்பித்துக் கொண்டேனப்பா!

பெரியாழ்வார் : உனக்குக் கடவுள் பித்துப் பிடித்து விட்டது.

ஆண்டாள் : ஆமாம். கடவுள் பித்துதான் பிடித்து விட்டது.

பெரியாழ்வார் : கடவுளிடத்தில் பற்று வைக்க வேண்டும்தான். அந்தப் பற்றை நீயும் கொள்ள வேண்டும் என்றுதான் திருமாலின் பெருமை எல்லாம் விளக்கி உன்னை வளர்த்தேன். ஆனால் பற்று முற்றி பித்தாய் மாறும் என்று நான் எதிர் பார்க்க வில்லை. இந்தப் பித்து மாற வேண்டும் என்றுதான் மணவிழாவை விரைந்து முடிக்க முயல்கிறேன்.

ஆண்டாள் : ஆம் மணவிழாவை விரைந்து முடியுங்கள்.

பெரியாழ்வார் : மணவிழாவை விரைந்து முடிக்கச் சொல்கிறாய்! அதே நேரத்தில் எல்லாம் வல்ல இறைவனையே மணப்பேன் என்கிறாய். என்ன வேடிக்கை கனவு காண்கிறாய் அம்மா.

ஆண்டாள் : உண்மைதான் அப்பா, நான் கனவே கண்டேன் அவனையே மணப்பதாக அப்பா!

பெரியாழ்வார் : புலவர்கள் தாம் பாடுவார்கள், இறைவனைக் காதலனாக வைத்துத் தங்களைக் காதலியாகக் கொண்டு. அதாவது இறைவனாகிய காதலனை உயிராகிய காதலி அடைய வேண்டுமென்று பாடுவார்கள். இறைவன் நாயகன். உயிர் நாயகி. உலகிடைத்தோன்றிய உயிர் மீண்டும் பிறவாமையை விரும்புகிறது. ஆகை யால் இந்த நாயகன் நாயகி பாவத்தில் உயிர் இறைவனை அடைய வேண்டும் என்று ஏங்குகிறது; சரணாகதி அடைய விரும்புகிறது. மகளே! அப்படி எண்ணாது, பற்று வைக்காது அவனையே மணத்தல் என்பது......

ஆண்டாள் : அப்பா !
பெரியாழ்வார் : என்னம்மா குழந்தாய் !
ஆண்டாள் : நான் பாவை நோன்பு நோற்றேன் என்பது தெரியுமில்லையா?
பெரியாழ்வார் : ஆம்.
ஆண்டாள் : அதனுடைய பொருளும் தெரியும் தங்களுக்கு.
பெரியாழ்வார் : ஆமாம்.
ஆண்டாள் : பின்பு காமனை வழிபட்டதும் தெரியும் தங்களுக்கு?
பெரியாழ்வார் : தெரியும்.
ஆண்டாள் : நான் தங்களுடைய அன்பு மகள் இல்லையா?
பெரியாழ்வார் : உண்மைதான்.
ஆண்டாள் : என் விருப்பத்தை நிறைவேற்றுவீர்களா !
பெரியாழ்வார் : நிறைவேற்றுவேன்.
ஆண்டாள் : பாவை நோன்பின் நோக்கம்?
பெரியாழ்வார் : மனதுக்கேற்ற மணாளனை அடைதல்.
ஆண்டாள் : காமனை வழிபடல்?
பெரியாழ்வார் : மனதுக்கேற்ற மணாளனை அடைய விதிக்க வேண்டுதல்,
ஆண்டாள் : நான் யார்?
பெரியாழ்வார் : என் அன்பு மகள்.
ஆண்டாள் : என் விருப்பம்?
பெரியாழ்வார் : திருமாலைத் திருமணம் செய்தல்.
ஆண்டாள் : அப்படியே செய்து விடுங்கள் !
பெரியாழ்வார் : ஆ......ஆலிலை அழகா ! அரங்கப்பெருமானே !

[குழம்பி.........குழப்பம் அடங்கி]

நான் வளர்த்த மகள் என்னையே பேச்சில் அடக்கி விட்டாள். ஆண்டாள் ! உன் விருப்பம் எம்பெருமானுக்கே ஏற்புடைத்தாக இருந்தால், அவனே ஏற்றுக்கொள்ளட்டும். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகி இறைவனையே ஆண்டவள் ஆயிற்றே நீ ! உன் விருப்பம் நிறைவேறுவதாக !

ஆண்டாள் : மிக்க மகிழ்ச்சி அப்பா ! மிக்க மகிழ்ச்சி ! என் அப்பா இல்லையா?

பெரியாழ்வார் : ஆண்டாள் ! திருமாலை நீ திருமணம் செய்வதெனில் யான், எந்தக் கோலம் கொண்ட திருமாலை உனக்கு மாப்பிள்ளையாய் அழைப்பது? திருமால் இருப்பிடங்களாய் கொண்டது நூற்றெட்டுத் தலங்கள். நூற்றெட்டுத் தலங்களிலும் நூற்றெட்டுக் கோலங்களில் தோன்றுகிறான் மாயவன். எக்கோலம் உனக்கு விருப்பம்? எத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் உனக்கு ஏற்றவன்.

ஆண்டாள் : நீங்களே சொல்லுங்களப்பா......எந்தெந்தத் தலங்களில் எந்தெந்தத் திருக்கோலங்களில் காட்சியளிக்கிறான் என்று. ஒரு சிலவற்றையாவது கூறுங்களேன் !

பெரியாழ்வார் : சொல்கிறேன், இந்தத் திருவில்லிபுத்தூரில் விண்ணளாவும் வண்ணமதில் சூழ் வடபெருங் கோயிலில் வள்ளல் எம்பெருமான் கொண்டது வளமார் கிடந்த கோலம்; கிடந்த கோலமாய் உயிர்களிடையே கிடந்த ஆணவமழித்து அருள்பாலிக்கிறான். கொன்றையும் கோங்கும் கொத்தலர் பூக்கும் திருமாலிருஞ்சோலை மலையில் எம்பெருமானின் திருக்கோலம் நின்ற திருக்கோலமே மருள் நீக்கிப் பொருள் அளிக்கும் அருள் வள்ளல் எம்பெருமான் மஞ்சு தவழ் மணிமாட மதில் திருவெள்ளறைத் திருத்தலத்தில் திருவமர் மார்பனைக் கிழக்கு நோக்கி நின்றருளி உலகத்து உயிர்களை உய்விக்கிறான். தில்லைத் தலத்தில் திருச்சித்திரக் கூடத்தே கடல்வண்ணன் கடல்நோக்கிக் கிடந்தருளிக் காட்சி அளிக்கிறான். இன்னும் காஞ்சியம்பதியில், திருவித்துவக் கோட்டில், திருக்குடந்தையில் நின்றும் கிடந்தும் அருள்கிறானம்மா ! அருள் வள்ளல் உனக்கு அருள்வானென்று எந்தத் திருக்கோலத்தை எதிர்நோக்குகிறாய் ஆண்டாள்.

(தொடரும்)

# உலகின் முதலாகிய ஓரூர்

ச. தண்டபாணி தேசிகர்

சிந்திக்கிருள் : சொல்கிருள் : ஒருதலைவி :

நேற்று முந்தாநாள் கைநிறைய வளையல்கள் இருந்தன. விதம் விதமான வளையல்கள். என் கைக்கு மட்டுமல்ல.........எனக்கும் பேரழகைத் தந்தன. இன்ரே எல்லா வளையல்களும் தாமே கழன்று விழுந்தன. தோழி! என் கைகளைப் பார்! வெறிச்சோடிக் கிடக்கிறது அல்லவா? ஏன் என்று கேட்கிருய். என் உள்ளந்தான் என்னிடத்தில் இல்லையே? நேற்று வந்தாரடி ஒருவர். அவர் கொள்ளை கொண்டு போய்விட்டார். அதனுல் வளையல்கள் சோர்ந்துவிட்டன என்று துன்பம் கனிந்த தோற்றமுடன் காட்சியளிக்கிருள் ஒருபெண்

இன்னமுமா பூட்டகம்? வந்தவர் யார்? ஏன் மறைக்கிருய்? அவருடைய ஊரையும் பேரையும் சொல்லு......? நான் தேடிப் பார்க்கிறேன் என்கிருள்.

தலைவி, "வந்தவர்க்கு தலையிலே பொன்மயமான சடை. அதற்குமேலே ஒரு பிறைமதி. அவர் ஊர் உலகத்திற்கே முதன்மையான ஊர். அதுதான் பிரமபுரம். அவ்வூர்க்கு அவர்தான் தலைவராம். இதோ இருக்கிருர் பாரடி..." என்று வானத்தைச் சுட்டுகிருள். தலைவிக்கு வந்த பரிபக்குவம் தோழிக்கு உண்டா? வானத்தை அண்ணுந்து பார்க்கிருள். இது இப்பாடலின் பிண்டப் பொழிப்பு.

அடையாளங் கூறுகிருள். முதலாவதாகச் சடையை புன்சடை: புற்கென்ற சடை–மென்மையான சடை. இவள்கண்டது முதற் காட்சிதானே. சடையைத் தொட்டா பார்த்தாள்? மென்மையென்று சொல்ல. தோற்றத்தில் அது துவண்டு கிடப்பதைப்பார்த்து அதன் மென்மையை அறிகிருள். அப்படித் துவண்டு கிடந்த சடையும்–நிமிர்ந்து தோற்றமளிக்கிறதாம். மண்ணுலகத்தை அழித்து விடுகிறேன் பார் என்று வேக வேகமாக விண்ணிலிருந்து இறங்கிய கங்கைநீர் தலைவனுடைய ஒவ்வொரு சடைக்காம்பு தோறும் சடையிலும் பரவியது. காற்றடைத்த பை போல சடை நிமிர்ந்து விட்டதாம். கண்ட முதற்காட்சியிலேயே கன்னிமை கழியாத உள்ளத்திலேயே இத்தனை கற்பனைக் காட்சிகள் அவளுக்கு.

நிலாவெண்மதி சூடி :

சடை பொன்நிறம். அதன்மேலே வெள்ளிய ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. அது இவள் மனத்தைக் கவர்கிறது. அதைக் கண்ட இவள் தோழிக்குச் சொல்கிருள், அவர் ஒரு வெண்மதியைச் சூடியவர் என்று. வெண்மதி–ஒரு கீற்றுப் பிறை. கடுகு சிறுத்தாலும் காரம் குன்ருது அல்லவா? குட்டிப் பாம்பென்ருல் விஷம் இல்லாதா போகும். ஒரு கலைப் பிறையாக இருந்தாலும் அது தன்னளவில் ஒளி வீசுகிறது. அதுமட்டுமா என்னைக் கொல்லுகிறது? முந்தாநாள் வரை, நிலவிலே களித்து துள்ளி விளையாடினேன். நேற்று அவரைக் கண்ட பிறகு இந்தப் பிறை என்னை வாட்டுகிறது. அணு அணுவாகக் கொல்லுகிறது. உடம்பு கணம்தோறும் இளைக்கிறது என்கிருள்.

வெள்வளை :

சங்காலியன்றது, அழகு நிரம்பியது. கைக்கு ஐந்துப்பத்துமாய் அடுக்கியிருந்தேன். அவ்வளவும் கழன்றது என்பாள் இனவெள்வளை சோர என்கிருள். கல்யாணம் கட்டிக் கணவனைப் பிரிந்த பெண்தான் கைக்கு ஒவ்வொரு வளையலாக தான் ஒரு சுமங்கிலி என்பதைக் காட்ட அணியவேண்டும். மணமே ஆகாத கன்னிப்பெண் கைக்கு எட்டும் பத்துமாக அணியவேண்டும் என்பது தமிழர் மரபு. இதனைக் குறிப்பிக்கிருள் இன வெள்வளை என்று.

உள்ளம் கவர்கள்வன் :

உலகத்தில் கள்வன் கவர்வது, உருவுடைப் பொருள்களை,பொன்னைக் கவர்வான்; பண்டம் பாடிகளைக் கவர்வான்; அருவமான அறிவுருவான உள்ளத்தை கவர்கின்றவன் யாருமில்லை!

யான் கண்ட தலைவன் என் உள்ளத்தைக் கவர்ந்து விட்டான். உள்ளமோ ஐம்பொறிகளை அடக்கி யாளுகின்ற தலைமையுடையது. அதனை அவன் கவர்ந்த பிறகு கண்காணவில்லை; காது கேட்கவில்லை. விழித்தகண் குருடாய் திரியும்; வீரமாதாக விளங்குகிறேன். என்ன ஆச்சரியம்; என்ன வியப்பு !

அவன் ஊர் எதுவென்று கேட்கிறாய். அது தான் முன்னமே சொன்னேனே பிரமாபுர மென்று. அதன் பெருமை தெரியுமா? 'பேர் பரந்த பிரமாபுரம்' பேர் போன ஊர். காவூர், கோவூர் முதலாகப் பல ஊர்களைக் கொண்டது உலகம். அந்த உலகத்தையே பேரூழிக் காலத்து அழித்த பெருமானுக்கு விதை முதலாக இருக்கின்ற ஓர் ஊர் இதுதான். அப்படிப் பேர்போனதாக்கும் பிரமாபுரம். அங்கே விரும்பி எழுந்தருளி இருப்பவன் எம்தலைவன். அவ்வூருக்கே தலைவன் இவன் தான்' என்கிறாள். இதிலே ஒருவகையான விம்மிதம் தோன்றுகிறது. எனக்குக் கிடைத்த தலைவனுக்கு உள்ள பெருமை வேறு யாருக்கும் இல்லையென்று. இவ்வளவும் நீர் பரந்த என்னும் திருப்பாடல் தரும் அனுபவப்பொருள். அடுத்து அறிவுப் பொருளைக் காண்போம்: உள்ளத்தைக் கொள்ளை கொடுத்த தலைவி பரிபாகமுற்ற ஆன்மா சிவானுபவத்திற்கு ஏற்ற பருவம் நிறைந்த ஆன்மா அதனிடத்திலே சகலான்மாக்கட்குரிய ஆணவ மலத்தின் வாசனைகூட இல்லை. மாயாமலம் செயலற்றுப் போயிற்று. கன்மமலம் வருத்த விதைபோல ஆற்றலற்றுக் கிடக்கின்றது.

இந்த நிலையில் அவள் செயல் ஒன்றுமில்லை. செய்வன யாவும் சிவச்செயலே. அப்போது உடல் மெலிகிறது. உள்ளொளி பெருகுகிறது. ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்குவது தானே சிவம். ஆன்மாவிற்குச் செய்யும் உபகாரம். அதனால் புறக்கட்டுகளாகிய வளையல்கள் போன்ற ஆடம்பர வாழ்வு அகலுகிறது. தாழ்வு எனும் தன்மை மிகுகிறது என்பதை ஆன்மா உணர்வதாகக் கூறும் பகுதி இது.

பேரூழிக் காலத்தில் உலகம் அழிகிறது. எல்லாம் தத்தம் காலத்தில் ஒடுங்குகின்றன. அனைத்தும் மாயையில் ஒடுங்குகின்றது. அதுவும் அன்னையாகிய பராசக்தியில் ஒடுங்கு கின்றது. சிவம் புணருற்பவதித்கு உரிய வினை முதலாகவும் அதாவது கருத்தாவாகவும் விதை முதலாகவும் அமைகிறது என்ற என்ற உண்மையை விளக்குவது பின் இரண்டு அடிகளும்.

இந்திருப்பாடலை ஞானக்கண் கொண்டு சாத்திரக் கண்ணாடியில் நோக்கினால் தன்னறிவு கெட்டு சிவமயமாகிய ஆன்மா அவனையே நினைந்து நினைந்து அருள்மயமாய் விளங்கும் என்பதைச் சுட்டுகிறது.

---

5. குணம்என்னும் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. 29

தீய இயல்புகளைக் கடந்து வளர்ந்து நற்குணங்களைப் பெற்று உயர்ந்து நிற்போர், வெகுளியை ஒரு நொடியும் தம் நெஞ்சத்தில் நிலைபெறச் செய்யமாட்டார்.

பொருள் :

வெகுளியுடையவர் நற்குணமுடைய சான்ரோரல்லர். இதனல், சாபம் வழங்குகின்ற முனிவர்கள் சான்ரோர் அல்லர் என்பது பெறப்படும்.

6. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 34.

மனத்தின்கண் தூய்மையுடையவராக வாழ்தலே அறம். மனத்தின்கண் தூய்மையின்றிச் செய்யப் பெறும் எவையும் அறமாகா. அவை ஆரவாரத் தன்மையுடையன.

பொருள் :

மனத்தின்கண் தூய்மை காத்தலே அறம். அஃதின்றிச் செய்யப்பெறுவன யாவும் அறமாகா.

7. அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. 49.

அறம் என்று சிறப்பிக்கத்தக்கது இல்வாழ்க்கையே. அந்த இல்வாழ்க்கையும் பிறரால் பழிக்கத்தக்கதாக இல்லாதிருப்பின் மேலும் நல்லது.

பொருள் :

இல்லறம், பொதுவாக அறமே. ஆயினும் அது பிறர் பழிக்கத்தக்கவாறில்லாமல் அமைந்தால்தான் நல்லது.

8. தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 56.

கற்பில் தன்னைக் காத்துக் கொள்பவளும், தன் கணவனைக் கற்பு நிலையினின்று வழாதிருக்கும்படி பேணுபவளும், புகழைப் பேணுபவளும், சோர்விலாது பணிகளை மேற்கொள்பவளுமே சிறந்த பெண்.

பொருள் :

சிறந்த வாழ்க்கைத் துணை, தன் கணவனின் ஒழுக்கச் சிறப்பிற்கும் துணையாயிருக்க வேண்டும் என்பது குறிப்பிடத் தக்கது.

(தொடரும்)

Printed at Peravai Achakam Edited, and Published by Sri A. Narayanaswamy, B.A.,
For the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road,
Alwarpet. Madras-600 018.